போவார்கள். மற்றும் இம் மண்ணுலகம் இவர்களுக்குப் பெரும் நரகமாகி விடுகிறது. "நிரயோய த்வயாவினு" (தாங்கள் இல்லாத இடமே நரகம்) என்பதே அடியார்களின் ஒரு மித்த சித்தாந்தம்.

பக்தர்களின் பித்தம் தணிய "மருத்துவ னுய் நின்ற மாமணி வண்ணு!" என்றபடி அவனே மருத்துவன் ஆகிருன். "பிரியேன் பிரியில் தரியேன்" என்றபடிக்கு, பாம்போடு ஒரு கூறையில் பயில்வது போல, தாங்கா உள்ளம் கொண்டு, பறவையெனத் துள்ளுவார் கள், கறவை எனக் கதறுவார்கள், கரை புரண்ட காதல் கடலென, நெஞ்சு நெக்குருகி அலைபோல் மலைத்தும் பேசுவார்கள். "பெருக் காறு பலதலைத்து(க்) கடலை நோக்குமாப் போலே நெக்கொசிந்து (நிலை குலைந்து) கரைந்து அலைந்து, இடிந்து உடைய பெருகு காதல்" என்ருர் ஸ்ரீஅழகிய மணவாளப் பெரு மாள் நாயனுர். "தாவி வையம் கொண்ட தடம் தாமரைகட்கே கூவிக் கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ" என்ற இவர்களின் கை யறு நிலையைச் சொற் கொண்டு சொல்லக் கேட்டிடினும், நட்ட கல்லும் உருகும், பட்ட மரமும் பிளக்கும்! கொம்பிலே தானே கனிந்த கனிபோல், இவர்களுடைய பழுத்த பக்திக் கனியே தெய்வக் காதற் கனியாக மாறி விடு கிறது. "கண்ணனுக்கே ஆவது காமம்" என்ற பாசுர அடிக்குச் சான்ருக, அவரை யொத்த ஆழ்வார்களின் அனுபவமே விளக்க உரையாகும்.

இவர்களின் அலை மோதும் காதல் பேச் சிலே கலையும், ஸமய சித்தாந்த தத்துவங் களும், இலைமறைகாய் போல் மண்டிக் கிடக் கும். இவர்கள் ஞானத்தில் தம் பேச்சாகவும், பிரேமத்தில் பெண் பேச்சாகவும் பேசிய பாசுரங்களே, தெளியாத மறை நிலங்களைத் தெளிவிக்கின்றன. தமிழுக்கே உரிய பொருள் இலக்கணமான அகமும், புறமும் ஆகிய திணை களைத் தெய்வ கீதத்தில் பாடிய இவர்கள், அழ காகிய தெய்வத்திற்குத் தீப ஆரத்தி எடுத் தார்கள் எனலாம். இவர்களின் செய்யவாய்க் கனி அமுதமாகிய திவ்விய பிரபந்தங்களின் பாடல் பெறுவதற்காக "என்னைப் பாடுங்கள் என் மீது கனி இடுங்கள்" என்று கூவிட்டழைப் பது போல் 108 திவ்விய தேசத்துப் பெருமாள் களில் சிலர் சில திவ்ய தேசங்களில் ஓடிவந்தும், சில திருப்பதிகளில் நாடி வந்தும் ஸேவை தந்தருளினுர்கள்.

திவ்ய பிரபந்தங்களை ஓதுங்காலையில் பெருமாள் திருவீதி புறப்பாடு இட்டாலும், "செல்வர் எழுந்தருளுவது எது கொண்டு கொல்?" என்றும் பெரியோர்கள் கூறுவார் களாம். "திவ்விய பிரபந்தங்களை வாய் மணக்க ஓதுவதையும், ஊழி முதல்வனுடைய ஒளி படரும், அப்போதைக்கு அப்போது ஆரா வமுதமாகிய திவ்ய தர்சனத்தை அனுபவிப் பதையும் விட, "இனிது கொல் தாமரைக் கண்ணன் உலகு" என்று திருக்குறளில் கூறிய படிக்கு, வைகுந்தமானுலும் அச்சுவை பெரி தாகுமோ?" என்றே, திவ்ய பிரபந்தாமுதத் தைப் பருகிப் பருகி நெஞ்சம் தடித்த பெரியோர் கள் பாரிப்பார்கள்.

ஆழ்வாரின் திவ்வியப் பாசுரங்களைப் பொய் யில் பாடல், பண்ணுர் பாடல், ஈரச் சொற்கள், தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்ன சொல் மாலைகள், என்றெல்லாம் சொல்லிப் போற்று வார்கள். "மாசின் மனம் தெளி முனிவர் வகுத்த எல்லாம் மாலுகந்த ஆசிரியர் (ஆழ் வார்கள்) வார்த்தைக்கு ஒவ்வா" என்று அமிருதா கூவாதினியில் ஸ்ரீவேதாந்த தேசிகன் அருளிப்பாடிட்டார். "இன்சொல் (ஆல்) ஈரம் அளை இ(ப்) படிறு இலவாம் செம்பொருள் கண்டார் வாய்ச் சொல்" என்ற திருக்குறளில் இனிய சொல்லிற்கு ஈரச் சொற்கள் என்றும் பெயரிட்டதை உற்று நோக்கினுல், ஈரச் சொற் கள் எனப் பெயர் பெற்ற திவ்ய பிரபந்தப் பாசுரங்களே இன் சொலாகும் எனலாம். இந்தத் திருக்குறள் திவ்ய பிரபந்தங்களுக்கு இலக்கணம் வகுப்பது போல் அமைந்திருக் கும் பண்பைக் கண் கொண்டு நோக்க வேண்டும்.

## பராங்குச நாயகியின் பெருமை :

ஆழ்வார் என்ற திருப்பெயர் பன்னிருவர் களையும் குறிக்குமானுலும், உயர் தனிச் சொல் லாய்க் குறிப்பது நம்மாழ்வாரையே! பெரியாழ் வார், குலசேகராழ்வார், என்று பெயர் அமைத்தே மற்றவர்களை அழைக்கிருேம். இவருக்குத் தலைவி நிலைமேலிட்டுத் தளர்ந்திருக் கும் பொழுது "பராங்குச நாயகி" எனப் பெயர் "ப்ரபந்த ஜன சந்தான கூடஸ்தர்" என்று

கூறும்படி ஆச்சார்ய கோஷ்டியிலும், மற்றும் ஆழ்வார் கோஷ்டியிலும் இரு தடவை முதல் தாம்பூலம் பெறுகிறவர் இவரே. இவருடைய பெருமையைப் பேரறிஞர்கள் அள்ளிச் சொரி வார்கள். இந்நிலையில் அறிவில் சிறியோ ஞகிய அடியேன் இம் மகரிஷியின் பெருமை மையைப் பேனுவின் அளவை இட்டுச் சுட்டிக் காட்ட முற்றிலும் இயலாதவனே. "சடகோப னைச் சென்று இறைஞ்சும் தலையார் எவர், அவரே எம்மையாளும் தபோதனரே" என்று கம்பனும், "ஆயிரம் இன் தமிழ் பாடினன் அருள் கண்டீர் இவ்வுலகில் மிக்கதே" என்று மதுர கவிகளும்,"நண்ணித்தென் குருகூர் நம்பி என்றக் கால் அண்ணிக்கும் அமுதூறும் என் நாவிற்கே" என்று கண்ணி நுண் சிறுத்தாம்பு நூலும், "ஓராயிரம் மாமறையில் தமிழின் ஒரு சொற் பொருமோ உலகிற் கவியே" என்று சங்கப் புலவர்களும் "நண்ணி அவனைக் காண நன்கு உருகி(க்) கூப்பிட்ட அண்ணலை நண்ணு ரேழையர்" என்று திருவாய்மொழி நூற்றந் தாதியும், இன்னோரன்ன பெரியோர்களின் நெஞ்சம் குழைந்த பேச்சுக்களே, ஆழ்வார் பெருமைக்கும் அவர் பிரபந்தங்களின் பெரு மைக்கும் முத்தாய்ப் பிட்டாகும்.

ஆழ்வார் சோதி வாய்திறந்து வெளியிட் டருளிய திருவாய் மொழியின் உரை நூலான ஈட்டிற்கோ அல்லது மற்றைய உரைகளுக் கோ "பகவத் விஷயம்" என்ற பெயர் சம்ப்ர தாயத்தில் ஏற்பட்டிருக்கின்றது. "ச்ருதினும் விச்ரமாய அலம்" (வேதங்கள் களைப்பாறும்படி யாக அவைகளின் செயலைச் செய்வது திரு வாய் மொழி) என்றும், "தத்ராஸௌ ஸத் வஸம்ந: சடரிபுபணிதி: ஸம்ஹிதாஸார்வ பௌமீ" (புராண இதிஹாஸங்களில் ஆழ்வார் ஸ்ரீசூக்தியானது மகாராணி போல் இருக் கிறது) என்று ஸ்ரீவேதாந்த தேசிகனும், "யத் வா சரண்யம் அசரண்ய ஜநஸ்ய" (வகையற்ற வர்களுக்கு வாய்த்த வழியாக இருப்பது ஆழ் வார் திருவடியே) என்று ஆழ்வானும், "அன்ப ரீட்டங் களித்து அருந்த நிறைப்பான் கழலன் றிச் சன்மவிடாய்க்கு நிழல் இல்லையே" என்று பிள்ளைப் பெருமாளையங்காரும், ஆழ்வாரையும் அவருடைய திருவாய் மொழியையும் கலந்தே சிறப்பித்துப் பேசினர்கள். ஸ்ரீவேதாந்த தேசி கன், தம்முடைய பகவத்யான ஸோபானம் என்னும் ஸ்தோத்திரத்தில், அரங்கன் திருவடி யை வருணிக்கும் பொழுது "வேலா தீத ச்ருதி பரிமளம்" என்று பாசுரம் இடுகிருர். இன்னுர் இனியர் என்ற பிரிவின்றிக்கே யாவரும், எக் காலமும், ஓதிப் பெருமை பெறும்படியான, மகிழம்பூ மணம் கமழும், ஆழ்வார் பாடல் பெற்ற, அரங்கன் திருவடியில், எல்லை நீங்கிய மறையான, திருவாய் மொழியின் மணம் வீசு கிறதாம். ஆழ்வாரும் திருவாய் மொழியின் முதல் பாசுரத்தில் "துயரறு சுடரடி தொழு தெழன் மனனே" என்று அவன் திருவடியைத் தான் பாடினுர் என்பதையும் நெஞ்சில் கொள்ள வேண்டும். ஆழ்வாரின் திருவாக்குப் பட்ட இடத்தில், தமிழ் மணமாகிய மகிழம்பூ மணம் கமழக் கேட்க வேணுமோ? "பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம் நலியும் நரகமும்" (5, 2, 1) என்ற பாசுரத்திற்குப் பொருள் நயம் பலவகையில் உரைக்கும் முறை யில், ஸ்ரீவைஷ்ணவர்களின் திவ்விய பிரபந்தத் திரளில் கலந்து அனுபவிக்க நித்ய சூரிகளும் வருகிருர்களாம். அவர்களுக்கு இந்தவிதம் ஆழ்வார் காப்பிட்டார் என்பார் பெரியோர். ஆழ்வாரைப் போன்ற பரம பாகவதர்களைக் காணவே வைகுண்டத்திலிருந்த நித்ய சூரி கள் வந்தார்களாம். அப்பொழுது அவர்களைக் கண்டு ஆழ்வார் "பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம் நலியும் நரகம்" என்று பாடி அவர்களுக்குக் காப்பிட்டாராம் என இவ் வாறும் ஒரு விதம் பொருள் நயம் கூறுவதுண் டாம். இதையே ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீசூக்தி "அடிமை புக்காரையும் ஆட் செய்வாரையும் காண லோகத்வீபாந்தரங்களில் நின்றும் போந்த தேவர் குழாங்களைக் கண்டு காப் பிட்டு" என்று கூறியபடி ஆழ்வார் எழுந்தருளி இருந்த புளிய மரத்தின் ஒவ்வோர் இலையிலும் எல்லா எம்பெருமான்களும் குடியேறிப் பாடல் பெறக் காத்துக் கிடந்தார்களாம். ஆனுல் 36 திவ்விய தேசப் பெருமாள்கள்தான் இவர் பாசுரம் பெறும் பேற்றைப் பெற்ருர்களாம். அப்பக்குடத்தான் பெருமாள் மட்டும், வலு விலே நிர்பந்தப்படுத்திப் பாசுரம் பெற்ருராம். இவ்வண்ணம் பல அனுபவ இன்பங்களை அர்ச்சாவதார ரஸிகர் சொல்லுவர். இது வல்லவோ இந்த ஆழ்வாருக்கு ஏற்பட்ட ஏற்றம்.

திருவாய் மொழியாகிய ஆராவமுதமும், நம் தமிழ் மொழியில் நமக்குக் கிடைத்த பெரும் பாக்யம் ஒரு புறம் இருக்கட்டும். இந்த அமு தத்தைப் பருக இளமங்கைக்கு நிலவு கிடைத்

தாற் போல், ஈடுமுதலிய அருமையான உரை நூல்கள் அமைந்த அழகை என்னென்று எடுத்து இயம்புவது? பரம பாகவதனுக்குப் பட்டுப் பரிவட்டம் கட்டினுப் போலேதான் இருக்கும். "ஸாரஸ் ஸாரஸ்வதானும் சடரிபு பணிதி:" என்று உள்ளம் குலாவிப் பேசிய ஸ்ரீவேதாந்த தேசிகர், கல்விக் கடலின், சார மாம் ஆழ்வாரின் திருவாய்மொழி என்றார். எல்லோரும் "நம்ஆழ்வார்" என்று போற்றும் பெரியாரை அளித்த தமிழ் நாட்டை மனதால் நினைக்கிறேன்; வாயால் வழுத்துகிறேன்; கையால் தொழுகிறேன்; தமிழ் நாடளித்த பெரு வாழ்வு" எனத் திரு. வி. க. வும் இவரைப் புகழ்ந்தார். இவ்வாழ்வார் அருளிச் செய்த பிரபந்தங்கள், 100 பாசுரங்கள் கொண்ட திரு விருத்தம், 7 பாசுரங்கள் கொண்ட திருவாசிரியம், 87 பாசுரங்கள் கொண்ட பெரிய திருவந் தாதி, 1102 தித்திக்கும் பாசுரங்கள் கொண்ட திருவாய் மொழி என நான்காகும். ஆகவே ஒரு வைகாசித் திருவிசாக நன்னாளில் அவ தரித்த நம் ஆழ்வாரின் பாசுரங்கள் 1296 ஆகும்.

இப்பிரபந்தங்களுள் "பொய்ந் நின்ற ஞானமும்" என்று பாசுரம் தொடங்கும் திரு விருத்தம் முதல் நூல். "இப்பத்தறிந்தார் பிறந்தார் உயர்ந்தே" என்று முடியும் திருவாய் மொழி, கடைசிப் பிரபந்தமாகும். திருவிருத் தம் முதலடியையும், திருவாய்மொழியின் கடைசி அடியையும் ஒன்று சேர்த்துப் படித் தால் "பொய்ந் நின்ற ஞானமும், இப்பத்தறிந் தார் பிறந்தார் உயர்ந்தே" என்ற ஒரு வாக்கிய மாகும். இவ்வாக்கியத்திற்குப் "பொய்யான அறிவில் மயங்கி நின்றாலும் ஆழ்வார் ஸ்ரீசூக்தி யை ஓதுவதால் உயர்ந்தே பிறந்தவராவர் மக்கள்" என ஒருவாறு பொருள் கூறலாம். இப்பொருள் முந்திப்பிந்தியிருந்தாலும், இக் கருத்தே ஆழ்வார் பாசுரங்களால் ஏற்படும் திண்ணிய பயனாகும் என்பதில் ஐயமில்லை. ஆழ்வார்கள் பன்னிருவர் என்பதை யாவரும் அறிவார்கள். அவர்களில் நம்மாழ்வார், திரு மங்கையாழ்வார், பெரியாழ்வார், குலசேகராழ் வார் என்பவர்கள், "சோதி வெள்ளத்தி னுள்ளேயெழுவதோர் உரு" என்று...பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம் (ஆண்களின் கண்ணையும், கருத்தையும் கொள்ளை கொள் ளும் வடிவழகன் இராமன்)என்கிறபடியே வைர உருக்காய் ஆண்களையும், பெண்ணுடை யுடுத்துமதான" என்ற பெரியோர் திருவாக்கின் படிக்கு இவர்கள், பெருக்கெடுத்த நீர் தருக வழி காணுமாப் போலே, எப்படியாவது அவனையே அடைய வேண்டும் என்ற ஓர் பெருங்காதலால் பெண் உடை உடுத்திப் பார்த்து நின்றார்கள். "பைந்தமிழின் பின் சென்ற பச்சைப் பசும் கொண்டலே" என்று குமரகுருபரர் சுவைநாடி தித்திக்கப் பேசியதையும் நினைத்துப் பார்த் தால், இவர்களின் பெண் பேச்சுக்கு "பசும்புல் கண்டபசுபோல், அவனும் இரு செவி கொண்டு ஒரு நோக்குடன் படிந்தான் போலும் என்று கூறலாம். இவர்களின் பச்சைப் பசும் பேச் சானது, காரும், கடலும் உள்ளளவும், பாரும் பரந்தாமனும் உள்ளளவும் வாடாமல் இருக்கும் என்பதில் ஐயமுண்டோ! இவர்களின் திருவாக் காம் ஆழ்கடலில் எடுக்க எடுக்க மாளாத முத் துக் கருத்துக்கள் எவ்வளவு என்பதை அவனே அறிவனோ? நாம் அறியோம்.

ஆழ்வார் பெண் உடை உடுத்தி, தாய்ப் பேச்சு என்றும், தோழிப் பேச்சென்றும், தலை மகள் பேச்சென்றும் பேசும் நிலையில், பாலாழி யில் படுத்த பால்வண்ணனைப் பற்றிக் கேட்டும், கண்டும், காலாழ, நெஞ்சழிய, கண் சுழல இருந்து, கங்குலும் பகலும் கண்துயிலறியாமல் இருந்தார். திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி முதலிய நூல்களில் தமக் குச் சுரந்து பெருகும் பெருங்காதலைப் பற்றிப் பேசிவிட்டு, பலவழிகளில் சுரந்துவரும் ஊற்று நீர் ஒன்று கலந்தாற் போல், கடைசி ப்ரபந்த மான திருவாய்மொழியில் கலந்து தேங்கும் தன் ப்ரேமையின் நிலையை, வெளியிட்டு வீறு பெறுகிறார். இவருக்கு ஏற்பட்ட மையலைப் பலபடியில் பிரித்து உரையாசிரியர்கள் உரை யிட்டருளினார்கள். 'பரம புருஷனைத் தாம் அனுபவித்தபடியே பேசுகிறார்' என்ற பிள்ளான் பணித்ததுபோல, பகவானுடைய திருமேனி அழகைத் திருக் கண்களாலும், திருக் கைகளா லும், ஒற்றித், தொட்டு அனுபவிக்கிறார் நம் நம்மாழ்வார்.

## பராங்குச நாயகியின் தூது (3)

ஒரு நாள் பராங்குச நாயகியான நம்மாழ் வார், தம் தாபத்தைத் தணிப்பதன் பொருட்டு, தம் வீட்டுத் தோட்டத்திலே தமியளாய் இருந்த பொழுது, தலைவனுடன் கலவி நின்று மகிழ்ந்திருக்கும் ஒரு நாரையைக் காண்கிறாள். முன்பு கண்ணால் கண்டு மகிழ்ந்த பகவா னுடைய திருமேனியை, அணைந்தும், பிணைந்

தும், அனுபவித்துச் சுனையாட விரும்பினுள். குற்றம் ஒன்றும் கணிசியாத, கோமள வண்ணன், நம்மைக் கைவிடான், என்ற நம்பிக்கையும், அவளுக்குப் பிறக்கிறது. தூது விட்டாவது, அவனிட மிருந்து ஒரு சொல் பெறலாம் என்ற தேட்டையும் வளர்கிறது. "நசை இயார் நல்கார் எனினும் அவர் மாட்டிசையும் இனிய செவிக்கு" (காதலர் மீண்டும் அருள் புரிய மாட்டார் என்றாலும், அங்ஙனம் மாட்டார் என்ற சொல்லாவது அவரிடமிருந்து கேட்கப் பெற்றால் அஃது என் செவிக்கு இனிமை தரும்) என்று திருக்குறளில் கூறியபடி, அந் நாரையை அவன் பால் தூதுவிடத் தீர்மானித்தாள். இந்த நிகழ்ச்சி திருவாய் மொழி முதல் பத்து நான்காம் திருவாய் மொழியில் பேசப்படுகிறது.

"இதில் தாமான தன்மையிழந்து, ஒரு பிராட்டி தசையைப் ப்ராம்தராய், ஹர்ஷத்தாலே (மகிழ்ச்சியாலே) சொல்லும் பாசுரம் போய், ஆற்றாமையாலே சொல்லும் பாசுரமாய்ச் செல்கிறது" என்ற பாட்டின் முகவுரையில் பெரியோர் உரை இட்டிருக்கின்றார். பகவான் நோய்வாய்ப் பட்டாருக்கு, உணவு கூடாதென நிறுத்தும் வைத்தியர்போல், பின்பு ஏற்படப்போகும் தம் கூடலின்பத்தை அமைதியுடன் அனுபவிக்க, உருக்காட்டாமல் வாளாவிருக்கிறான்" இவ்விடத்தில் ஈட்டு உரை மிக அழகு "ஆமத்தில் (நோய்வாய்ப்பட்ட காலத்தில்) சோறு பாதகம் என்று மத்தாலே, நிதாநக்ஞரான (நோயின் மூல காரணத்தை அறிந்த) பிஷக்குக்கள், (மருத்துவர்கள்) போஜன நிரோதம் பண்ணுமா போலே (உணவைத் தடுப்பது போலே) மேல்வரும் அனுபவங்கள் ஸாத்மிக்கைக்காக நாலடி பேர நின்றான்" என்பது.

இந்த இடத்தில் பராங்குச நாயகி, தலைவிப் பேச்சில் பேச விழைகிறாள். பறவை தூது செல்லுமா? பறவைக்குப் பேசும் இயல்புண்டா? என்றெல்லாம் நினையாது, மயர்வறமதிநலம் அருளப்பட்ட ஆழ்வார் பேசியது எங்ஙனம்? என்று சிலருக்குச் சில ஆக்ஷேபம் எழலாம். அதற்கும் பதில் கூறும் வகையில் ஈடு முகவுரை இங்கு ஓர் சிறு நிகழ்ச்சியை எடுத்துக் காட்டுகிறது. நெய்தல் நிலத்திலே ஒரு பெண் பூங்காவனத்திற்குத் தன் தோழிகளுடன் செல்லுகிறாள். தோழிகள் மிகவும் ஆர்வத்துடன் பூக்கொய்து கொண்டிருக்கிறார்கள். அவ்வமயம் ஓர் விலங்கைத் துரத்திக் கொண்டு தன் நண்பர்களுடன் ஓர் இளவரசன் அந்தத் தோட்டத்தின் பக்கம் வருகிறான். இவ்விளவரசனை அத்தோட்டத்தில் தனியே விட்டு விட்டு, அவ்விலங்கு மறைந்து போகிறது. அவ்வமயம் ஏற்பட்ட கூடல் இன்பம் இருவருக்கும் ஏற்பட, பிறகு தலைவனை விட்டுத் தலைவி பிரிந்து வருந்துகிறாள், "இனி இரண்டு தலையையும் அழித்தாகினும் கிட்ட வேணும்" என்ற ஆற்றாமை மேலிடவே, அப்பொழுது "இவை சொல் சொல்ல மாட்டாதவை" என்றும் நினையாதே, கண்ணால் கண்ட பொருளைத் தூது விடத் துணிந்தாள் தலைவி" என்று.

இந்தச் சிறுகதைக்கு ஒப்பப் பராங்குச நாயகியும் (ஆழ்வாரும்) நாரைவிடு தூதில் நசை கொள்கிறாள். இந்த இடத்தில் ஆழ்வாருடைய திருக் கண்வட்டத்திலே அகப்பட்டு, ஆழ்வாருக்கு ஒரு குற்றேவல் செய்யும்படியான பாக்கியம் இந்த நாரைக்குக் கிட்டியதை நினைத்து, அந்த நாரையை ஸ்ரீவைஷ்ணவ மகாசாரியரான பட்டர் என்பவர் "சக்ரவர்த்தித் திருமகன் (ராமன்) திருவவதரித்த பின்பு வானர ஜாதி வீறு பெற்றால் போலே காணும், "ஆழ்வார்கள்" திருவவதரித்துத் திர்யக் ஜாதி (விலங்கினங்கள்) வீறு பெற்றபடி என்று புகழ்ந்தார் :—

இவள், நாரை, குயில்கள், அன்னப் பறவைகள், மகன்றில்கள் (அன்றில் பறவைகளில் நீல நிற முடையவைகள்), குருகுகள், வண்டுகள், கிளி, நாகணவாய்ப்பறவை, குளிர்காற்று, தன் நெஞ்சம் என்ற 10 பொருள்களைத் தூது விட்டுப் பேசுகிறாள் "மேகம் பருகின ஸமுத்திரம் போலே (கடல் நீரைப் பருகின முகில் போல) என்ற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீசூக்திப் படியே ஒவ்வொரு பாட்டிலும் பொருள் நயமும், அகத்துறைச் சிறப்பும், இறைமாட்சியும், தெள்ளத் தெளியக் காணக் கிடக்கின்றன. இந்தத் திருவாய் மொழியில் கருத்துச் சுருக்கத்தைத் திருவாய் மொழி நூற்றந்தாதி திருவாக்கிட்டதாவது.

அஞ்சிறைய புட்கள் தமை ஆழியானுக்கு நீர்,
என்செயலை(ச்) சொல்லும் என இரந்து—விஞ்ச
நலங்கியதும் மாறன் இங்கே நாயகனைத் தேடி
மலங்கியதும் பத்தி வளம்.

# சிவஞான போதம்

திரு. க. வச்சிரவேல் முதலியார், B.A.,L.T., காஞ்சிபுரம்.

(முன் இதழ்த் தொடர்ச்சி)

**பத்தாஞ் சூத்திரம்**

> அவனே தானே ஆகிய அந்நெறி
> ஏகனுகி இறைபணி நிற்க
> மலமாயை தன்னெடு வல்வினை இன்றே

என்பது சூத்திரம்.

ஏழாம் சூத்திரத்தால் பாசத்தை விட்டுப் பதியினைச் சார்தற்கு ஏதுவாகிய சாதனம் செய்தற்குரியது ஆன்மா என்பது உணர்த்தப் பட்டது. எட்டாஞ் சூத்திரத்தால் ஞானமே சிறந்த சாதனம் என்பதும், அது முன்னைத்தவ முதிர்ச்சி காரணமாக முதல்வன் குருவாய் வெளிப்பட்டு நின்று உணர்த்துதலால் உணரப் படும் என்பதும், தத்துவங்களினீங்கி முதல்வன் திருவடியைத் தலைப்படுவதே ஞானத்தின் பயன் என்பதும் உணர்த்தப்பட்டன. ஒன் பதாஞ் சூத்திரத்தால் அச்சாதனத்தை வாய்ப் பச் செய்யுமாறு உணர்த்தப் பட்டது. ஆதலால் அம்மூன்று சூத்திரமும் சாதன இயல் எனத் தொகுத்துக் கூறப்படும். பின்வரும் மூன்று சூத்திரங்களும் பயன் உணர்த்துதலின் பய னியல் எனப்படும். ஞானத்தின்பயன் பாச வீடு, சிவப்பேறு என இருவகைப்படும். அவற் றுள் இப்பத்தாஞ் சூத்திரம் பாசவீடு என்னும் பயனை எய்தும் முறையை விளக்குகின்றது. இக் கருத்தை மெய்கண்டதேவர் பின்வருமாறு சொற்செய்து கூறியருளுகின்றார் :—

> ''என்பது சூத்திரம்; என்னுதலிற்றோ வெனின்
> பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்துதல்
> நுதலிற்று''

சூத்திரத்தில் **அவனே** என்றது முதல்வனை; **தானே** என்றது சிவஞானத்தாற் சிவனைத்தன் **அறிவின்**கண் நாடிக்கண்ட உயிரை.

**சூத்திரப் பொருணிலை :**

எல்லாம் சிவனென நின்ற அம் முதல்வன், உயிர் தன்னைக் கண்டறியாத பிறப்பு நிலையில், தான் என ஒரு பொருளிருப்பதாக அதன் அறிவில் தட்டாதபடி கரந்து நின்று அவ் வுயிரேயாகி ஒற்றுமைப்பட்டு நின்று வந்தான்; அது போல, அவனைத்தன் அறிவிற்கண்ட மெய்யுணர்வு நிலையில், மெய்யுணர்ந்தோன் தற்போதம் சிறிதுமின்றி எல்லாம் அவனே யென அவன் அருளிற் கரந்து ஒற்றுமைப் பட்டு நிற்பின் ஆணவ மலவாதனை இல்லை யாய்க் கழியும். மேலும், அங்ஙனம் ஒற்றுமைப் பட்டு நின்று தன் செயலாவது ஒன்று மின்றி அவன் அருள் வழியே செயற்பட்டு நிற்பின் மயாகாரியத்தோடு கூடிய வலிய வினையும் இல்லையாய்க் கழியும்—என்றபடி.

**ஏகனுதல்** — கவர்த்தலின்றி ஒற்றுமைப் படுதல். தான் அவனே என ஏகனுகி **நிற்க மலம் இன்றே;** அவ்வாறு ஏகனுகி **இறைபணி நிற்க மாயை தன்னெடு வல்வினை இன்றே—** என முடிக்க. **அந்நெறி—அதுபோல, நெறி-** உவம உருபு.

இச் சூத்திரப் பொருள் (1) **அவனே தானே ஆகிய** அந்நெறி ஏகனுகி **நிற்க மலம் இன்றே** எனவும், (2) **இறைபணி நிற்க மாயை தன் னெடு வல்வினை இன்றே** எனவும் இரு கூறுபட வைத்து ஆராயப்படுகின்றது. ஆதலால் இஃது இரண்டு அதிகரணங்களை உடையது.

**முதலதிகரணம்:—**

முன் சூத்திரத்திறுதியில் சிவஞானங்கண் ணுக ஞேயத்தைக் கண்ட காட்சி சலியாதிருத் தற்பொருட்டு முத்தி பஞ்சாக்கரம் மஹாவாக்கி யப் பொருள்படச் சுத்தமானதமாகக் கணிக்கப்

படும் என்றார்; அங்ஙனம் கணிக்கும்போது நிற்குமுறை இது என உணர்த்துவது இவ்வதிகரணம். யான் என்றும், என் அறிவு என்றும், என்னால் அறியப்படுவது இது என்றும் பகுத்து உணரும் உணர்வு மூலமலத்தால் உயிர்க்கு உளதாவது. இம் மயக்கவுணர்வு நீங்கினாலன்றி ஆன்மாச் சிவானந்த நுகர்ச்சியைப் பெறாது. ஆதலால், யான் எனது என்னும் இச்செருக்கு நீங்குதற் பொருட்டுச் சிவத்தைச் சிவஞானத்தால் தலைப்பட்ட ஆன்மாத் தான் எனச் சிறிதும் முனைத்தலின்றி முதல்வனோடு ஒற்றுமைப்பட்டு நிற்க என்பது இவ்வதிகரணத்துக் கூறப்படும் பொருள்.

யானே உளன் முதல்வன் இல்லை என்பார்க்குத் தற்போதம் உள்ளது என்பது வெளிப்படை; இனி, முதல்வனைக் காணலுறுவார், யான் என்றும் அவன் என்றும் பகுத்து உணரும் போதும், அவர்க்கு யானே என்பார்க்குப் போலத், தற்போதமே உள்ளது. ஆதலின், தற்போதம் உடையார்க்கு முதல்வன் அவர் அறிவுள் கரந்து தன்னைக் காட்டாது நிற்பன்; நிற்றலின் உலகமே காட்சிப் பட்டு இருள் சேர் இருவினை ஈட்டி இறந்து பிறந்து வரும் கூட்டுறு நிலையினின்றும் அவர் பெயர்வதில்லை. அவ்வாறின்றி, தானென ஒரு முதல் தோன்றாதபடி முதல்வனே என்னும்படி தன்னை முதல்வனுக்குக் கொடுத்து அவனோடு ஒற்றுமைப்பட்டு நிற்கும் முத்தனை முதல்வன் தன் திருவடி நிறைவில் அடங்கி நிற்கச் செய்து தானுந் தன்மையை வழங்கியருள்வன்.

இக் கருத்தை மெய்கண்டதேவர் பின் வருமாறு கூறியருளுகின்றார்:—

"ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏகனாகி நிற்க என்றது, அவ்வாறு நிற்கவே யான் எனது என்னும் செருக்கற்று அவனது சீபாதத்தை அணையுமாகலான்."

[யான்—அறிபவன்; எனது—அறிவு, அறிவுக்கு விடயம். செருக்கு—மயக்க உணர்வு; இங்கு அதற்கு ஏதுவாகிய மலவாதனையைக் குறிக்கின்றது.]

நானவனென் றெண்ணினர்க்கும்
நாடும் உளம் உண்டாதல்
தானெனஒன் றின்றியே
தான் அதுவாய்—நானென ஒன்(று)
இல்லென்று தானே எனுமவரைத்
தன்னடி வைத்(து)
இல்லென்று தானும் இறை.

இவ்வதிகரணம்,

"யான் எனதென்னும் செருக்கறுப்பான்
வானோர்க் குயர்ந்த உலகம் புகும்"

என்னும் திருக்குறளின் நுண்பொருளை விளக்குவதாதல் காண்க. இங்கு விதிக்கப்பட்ட ஏகனாகி நிற்றல் என்னும் நிற்கு முறை பின்வரும் திருமுறைகளோடு ஒப்பு நோக்கி உணர்தற்கு உரியது:—

"எனதுரை தனதுரையாக நீறணிந் தேறுகந்தேறிய நிமலன்"—திருஞான சம்பந்தர், திரு இலம்பையங் கோட்டூர்.

"எம்பிரான் என்றதே கொண் டென்னுளே
புகுந்து நின்றிங்(கு)
எம்பிரான் ஆட்ட ஆடி என்னுளே உழிதர்வேனை
எம்பிரான் என்னைப் பின்னைத் தன்னுளே
கரக்கும் என்றால்
எம்பிரான் என்னினல்லால் என்செய்கேன் ஏழை
யேனே—
திருநாவுக்கரசர்.

இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத் (து)
எழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்;
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்று சென்(று) அணுவாய்த் தேய்ந்து
தேய்ந் தொன்றும்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்று நீ யல்லை அன்றியொன் றில்லை
யாருன்னை அறியகிற் பாரே
—திருவாசகம

"சொற்பால் அமுதிவள்; யான் சுவை என்னத்
துணிந்திங்ஙனே.
நற்பால் வினைத்தெய்வம் தந்தின்று நான்
இவள் ஆம் பகுதிப்
பொற்பார் அறிவார்?"
—திருக்கோவை

# ஒருநம்பி

மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார், தருமபுரம்.

( முன் இதழ்த் தொடர்ச்சி )

இந் நிலையில் திருநாவுக்கரசு நாயனுர் பல தலங்களுக்குச் சென்று சிவபெருமானை வணங்கித் திருப்பதிகம் பாடி, அங்குத் திருப்பணி செய்து செல்லுங்கால், திருப்பழனத்தை வணங்கி அப்பாற் சென்ருர். சென்றவர் திங்களூருக்கு அருகில் செல்லும் பொழுது அப்பூதியடிகள் வைத்த தண்ணீர்ப் பந்தரைக் கண்டார்: கண்டு அதனது அமைப்பில் ஈடுபட்டு உள்நுழைந்து, அதன் குளிர்ச்சியான தன்மையையும், அதில் வைக்கப்பட்டிருந்த தேவாமுதம் போன்ற குளிர்ந்த நீரையும் பிறவற்றையும் பார்த்து மனம் மகிழ்ச்சி யுற்ருர். மேலும் அப்பந்தரை அப்பர் நன்கு நோக்குகையில், பல இடங்களிலும், 'திருநாவுக்கரசர் தண்ணீர்ப் பந்தல்' என்று எழுதியிருந்ததைக் கண்டார். 'இதற்குக் கருத்து யாதாய் இருத்தல் கூடும்!' என்று ஐயம் கொண்டார்.

'திருநாவுக்கரசு' என்ற பெயர் தமக்கே இறைவனுல் கொடுக்கப்பட்டது என்பதை நன்கு அறிந்திருப்பினும், 'நமது பெயரை இப் பந்தருக்கு வேருெருவர் இட்டு நடத்தும் அளவிற்கு நாம் தகுதியுடையோமா?' என்னும் எண்ணமே, திருநாவுக்கரசருக்கு அங்கு ஐயத்தை விளைத்தது. அதனுல், அவர் அங்கு இருந்தவர்களைப் பார்த்து, 'இத் தண்ணீர்ப் பந்தரை இந்தப் பெயரால் இங்கு அமைத்தவர் யாவர்?' என்று வினவினுர். அதற்கு அவர்கள், இத் திங்களூரில் உள்ள, 'அப்பூதியடிகள்' என்பவர்தாம் இதனை இவ்வாறு அமைத்துள்ளார்: இது மட்டும் அன்று; இப் பகுதியில் காணப்படும் சாலைகள், குளங்கள், சோலைகள் எல்லாம் அவர் செய்த அறச்செயல்களே. அவை எல்லாவற்றிற்கும் இப்பெயரையே அவர் இட்டிருக்கின்ருர்' என்று கூறினுர்கள்.

அதைக் கேட்ட நாவரசருக்கு மேலும் ஐயம் மிகுந்தது. அதனுல், அவர் அப்பூதியடிகளாரையே நேரில் கண்டு அதன் கருத்தைத் தெளிந்து கொள்ளக் கருதி, அவர் இருக்கும் இடத்தை வினவியறிந்து அவரது இல்லத்திற்குச் சென்று வாயிலிலே நின்ருர்.

சிவனடியார் ஒருவர் நம் வாயிலில் வந்து நிற்கின்ருர் என்பதை வெளியில் இருந்தவர்கள் வந்து சொல்லக் கேட்ட அப்பூதியடிகள், விரைவில் வெளிப்போந்து நாவரசர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினுர். ஆயினும் நாவரசர் அப்பூதியடிகளார் தம் திருவடிகளில் வீழ்வதற்கு முன்பே அவர் பாதங்களில் தாம் வீழ்ந்து அவரை வணங்கினுர். இதுவே உண்மைச் சிவனடியார்களிடம் நாம்காண்பது. சிவனடியார் யாவரும் தம்மைப் பிற அடியவரை வணங்குவோராக நினைப்பதே யல்லது,

---

"நுகர்ச்சிக் காலத்து இவள் அமுதும் யான் அதனின் வேறன்ருகிய சுவையும் என ஒரு வேமாய் புணர்ந்து ஒன்றப் பெற்றும் யான் பெறு வேனும் இவள் பேறும் ஆகும் பாகு பாட்டின்பொலிவை அங்ஙனம் நுகர்ந்தார் அன்றிப் பிறர் ஆர் அறிவார்"என்பது திருக்கோவையின் கருத்து; "நான் இவள் ஆம் பகுதிப் பொற்பு" என்பது "அஹம் பிரஹ்மாஸ்மி" என்னும் ஒரு வார்த்தையின் ஞாபகம் ஆதல் காண்க. இக் கருத்துப் பற்றியே கச்சியப்ப முனிவர் ஒருவார்த்தையின் பொருளைப் பின்வருமாறு விளக்குவார் ஆயினர் :—

"சொன்ன தத்துவமசி எனும் சுருதியின்
மொழியும்,மன்னுகாரண பதியும் நான் எனவரு
பசுவும், என்ன வேபொருள் இருமைகண்(டு)
இயைந்துவேறன்மை, தன்னை நாட்டிய தல்லது
தனியென்பு தின்றே." (தொடரும்)

பிறரால் வணங்கப்படுவோராகத் தம்மை நினைத்தல் இல்லை.

இவ்வாறு ஒருவரில் ஒருவர் முந்தி இருவரும் தம்முள் வணங்கி எழுந்தபின்னர், அப்பூதியடிகள், திருவருள் ததும்பி வழியும் வாகீசரது திருவேடப் பொலிவிலும், திருமேனி நிலையிலும் ஈடுபட்டு அன்பு பெருக, 'கருணை பொழியும்திருக்கோலத்தையுடைய நாயனாரே, அடிகள் எனது சிறு குடிலுக்கு எழுந்தருளிவர, யான் அளவற்ற தவம் செய்தேன் போலும்! இங்ஙனம் எழுந்தருளிவரக் காரணம் யாதோ?' என வினவினார்.

நாவுக்கரசர், 'நாம், திருப்பழனப் பெருமானை வணங்கிக்கொண்டு இப்பால் வருகின்ற வழியில், உமது அரிய தண்ணீர்ப் பந்தரைக் கண்டு மகிழ்ந்து, மற்றும் நீவிர் செய்துள்ள அறங்கள் பலவற்றையும் கேள்வியுற்று, உம்மைக் காணவந்தோம்; அவை பற்றி எமக்கு ஓர் ஐயம் உண்டாயிற்று; அஃதாவது, சிவனடியார்களுக்கு உதவியாக நீவிர் வைத்துள்ள சிறந்த தண்ணீர்ப் பந்தரில் உமது பெயரை எழுதாமல், வேறொரு பெயரை எழுதியுள்ளீரே அதற்குக் காரணம் யாது?' என்றார்.

இதனைக் கேட்டதும் அப்பூதியடிகளார் பெரிதும் மனம் வருந்தி, 'ஐயரே, என்ன செய்தியைக் கூறினீர்! இஃது உமக்கு அழகியதாய் இல்லை. பல்லவனுகிய பேரரசன் சமணரது தீய உரையால் மயங்கி இழைத்த சொல்லொணுக் கொடுமைகள் அனைத்தையும் தமது திருத்தொண்டின் வன்மைஒன்றினாலே வென்ற நம் அருட்டலைவர் பெயரோ வேறொரு பெயர்? திருத்தொண்டானது, மறுமையில்தான் பயன் தரும் என்று எண்ணித் தமது அறியாமையால் மயங்கிக் கிடக்கின்ற என்போன்றவரும், அஃது இம்மையிலேயும் நல்வாழ்வை யருளும் என்று தெளியச் செய்த அவருடைய திருப்பெயரை நான் எழுதியிருப்பதைக் கண்டு மகிழ்ந்து, அச்செயலில் என்னை மேலும் ஊக்குவியாது, என் மனம் வருந்தும்படி கொடிய சொல்லைச் சொன்னீர்கள். கல்லையே தெப்பமாகக் கொண்டு கடலைக் கடந்து கரையேறிய நம் நாயனாரது பெருமையை அறியாதவர் இவ்வுலகத்தில் ஒருவரும் இரார். அங்ஙனமாக, நீர் எங்கிருப்பவர்? நன்மையே புரிதற்குரிய திருவேடத்தைப் புனைந்து கொண்டு அப்பர் பெயரின் அருமையை அழித்துரைத்தீர்! நீவிர் யார்? என்று கேட்டார்.

திருநாவுக்கரசர் அப்பூதியடிகளாரது திருத்தொண்டின் ஆர்வத்தை அறிந்து வியந்தும், அத்திருத்தொண்டின் பெருமையைத் தாம் பன்னாள் உணராது இருந்தமையை நினைந்து வருந்தியும், தம்மை இன்னார் என்று அறிய விரும்பிய அப்பூதியடிகளார்க்கு, 'புறச் சமயத்தில் பன்னெடுநாள் கிடந்து, பின்பு, நம்பெருமான் தனது அளவற்ற கருணைப் பெருக்கினாலே கொடிய சூலைநோயைக் கொடுத்து உணர்த்த, அதன் பின்பே திருத்தொண்டின் பெருமையை ஒருவாறு உணர்ந்து, சைவ சமயத்தை அடைந்து உய்ர்ந்த அந்தச் சிறுமையை உடையவன் நான்தான்' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

என்னே பெரியவர்தம் பணிவு! இவ்வாறு பணிவாகக் கூறவேண்டுமென்று நினைத்து நாயனார் கூறவில்லை. மெய்யுணர்வின் மிகுதி காரணமாக உண்மையில் இயல்பாகவே அஃது அவரிடம் அமைந்திருந்தது. இவ்வாறு, 'நான்' என்பது அற்று அடங்கி நிற்பவரிடத்திலேதான், சிவத்துவம் இனிது ஒளிவீசித் திகழ்கின்றது.

'தம் முன்னே நிற்பவர் தம் தலைவராகிய நாவுக்கரசரே' என்று தெரிந்தவுடன் அப்பூதியடிகளார் திகைத்துப் போனார். என்ன செய்வது என்றே அவருக்கு விளங்கவில்லை. பெருமிடியன் ஒருவனுக்குத் திடீரென அளவற்ற நிதித்திரள் அவன் இல்லத்தில் தானே வந்து குவிந்தது போன்ற பெருமகிழ்ச்சியடைந்து துள்ளினார்; அங்கும் இங்கும் ஓடினார்; அவரது புகழ்ப் பாடலைப் பாடினார். எதனை முன்னே செய்வது? எதனைப் பின்னே செய்வது என்று கூட அறிய மாட்டாதவராய், நாயனாரை உள்ளே அழைத்துக் கொண்டுபோக மறந்து, தம் மனைவியாரையும் மக்களையும் வெளியே அழைத்து வந்து வணங்கச் செய்தார். அதன் பின்பே நாயனாரை இல்லத்திற்குள் அழைத்துச்சென்று ஆசனத்தில் எழுந்தருளச் செய்து அவரது திருவடிகளை விளக்கி, அத் தண்ணீரைத் தமது தலையில் தெளித்துக் கொண்டு உள்ளேயும் பருகினார். தம் மனைவி மக்களுக்கும், அவ்வாறு செய்வித்தார். இத்தகைய ஆசார்ய பக்தி யாரிடம் காணப்பெறும்?

அதன் பின்பு அன்று தமது திருமனையில் அமுது கொள்ளுமாறு நாயனாரை வேண்டிக் கொள்ள, நாயனாரும் உடனே மகிழ்ச்சியோடு அதற்கு இசைந்தருளினார்.' (தொடரும்)

# திருவஞ்சைக்களம்

கோவைகிழார் திரு. C.M. இராமச்சந்திரன் செட்டியார், B.A.,B.L.,

1. **இடம்:**-சேர நாடு என்ற மலைநாட்டில் சைவ சமயகுரவர்களால் பாடப்பெற்ற திருக்கோயில் ஒன்றே ஒன்றுதான் உண்டு. அதுதான் திருவஞ்சைக்களம் என்ற புனிதத் தலம் ஆகும். முன்னாள் கொச்சி சீமையில் ஒரு பிரிவான முகுந்த புரம் என்ற வட்டத்தில் உள்ள ஒரு சிறிய ஊர். மேற்குக் கரை ஓரமாக வடக்கே பாரதப்புழையிலிருந்து தெற்கே திருவனந்தபுரம் வரை ஒரு நீண்ட நீர்வழி இருக்கிறது. அதுபல காயல்களையும் புழைகளையும் இணைத்து விட்டவகை ஏற்பட்டது. வாணிபத்திற்காக வஞ்சி (படகு)கள் மூலம் சரக்குகளை ஏற்றுச் செல்லும் நீர் வழி அது வாகும். இவ்வழியில் புல்லூற்றுப் புழைக்கு அடுத்தாற்போல் தென்னந் தோப்புக்களுக்கு இடையே திருவஞ்சைக்களம் என்ற புனித இடம் இயற்கைச் செழிப்புக்களுடன் விளங்குகிறது. இவ்வூர் கொடுங்கோளூர் என்ற வட்டத்தால் முப்புறமும் சூழப்பட்டுள்ளது. அதில் கோவிலகம், கொட்டாரம், சிவாலயம், அம்பலத்தார் வீடுகளும் தோப்புக்களும் உள்ளன.

2. **வழி:** திருவஞ்சைக்களம் செல்வதற்கு நான்கு வழிகள் உண்டு. கொச்சி இருப்புப்பாதையில் செறுவண்ணூர் (ஷோரனூர்) சந்தியிலிருந்து எரணகுளம் செல்லும் பாதையில் திருச்சூர் என்ற திருச்சிவப் பேரூர் நிலையத்தில் இறங்கிக் கொடுங்கோளூர் வந்து, வண்டியில் (பஸ்) சென்று ஒன்றரைக்கல் நடந்தால், திருவஞ்சைக்களம் அடையலாம். வண்டிக்கட்டணம் முக்கால் ரூபாய். இரண்டாம் வழி - இரிஞாலக் குடா நிலயத்தில் இறங்கி 4 மைலில் உள்ள அவ்வூரை அடைந்து கொடுங்கோளூர் வழியில் செல்லலாம். வழியில் ஊரகம், சாலக்குடி, திருப்பிரையாறு, இரிஞாலக் குடா பரதாழ்வார் கோயில், கருவப் படனு முதலியவை காணலாம். திருச்சூர் பெரிய ஊர், நடுவில் பெரிய கோயில் இருக்கிறது. வடக்கு நாதர் என மருவியிருக்கும் இடபக்குன்று நாதர் மூலவர் பெயர். மூன்றுவது வழி திருச்சூரிலிருந்து, குருவாயூர் என்ற கண்ண பிரான் கோயில் வழியாகச் செல்லலாம். நான்காம் வழி எரணு குளத்திலிருந்து-நீராவிப் படகு வழியாக வடக்கே 32 கல் சென்றால் திருவஞ்சைக்களம் அடையலாம். முதல்வழியே தமிழருக்கு எளிதானது.

3. **ஊரமைப்பு** — திருவஞ்சைக்களத்திற்கு வடக்கே கொடுங்கோளூரும், தெற்கே கோட்டைப் புறமும், மேற்கே மேற்றலையும், அதற்கும் மேற்கே அழிக்கோடும், கிழக்கே புல்லூற்றும் இருக்கின்றன. ஊர்கள் பிரிவினையின்றித் தொடர்ந்தே இருக்கின்றன. கடைத் தெருக்கள் மட்டும் வீடுகள் சேர்ந்துள்ளன. மற்றவைகள் மரங்கள் நிறைந்த வளைவுகளாக உள்ளன. நீர்ச் செழிப்பு நிரம்ப உண்டு. கொடுங்கோளூரில் பகவதியம்மன் கோயிலும் அதனையடுத்து பிரயாணி விடுதியும் குளங்களும் உண்டு. பகவதியம்மன் செங்குட்டுவனால் நிறு

வப் பட்ட கண்ணகி கோயில் என்பர். ஊர்ப் பெயரே அதனைக் குறிக்குமாம். மேற்றலையில் இரண்டு சிவாலயங்களும், குலசேகரப் பெருமாள் கோயிலும் இருக்கின்றன. கீழ்த்தளியில் சிவாலயம் பழைமையானது. 13-ம் நூ. கல்வெட்டுண்டு. தெற்கே கோட்டைப் புறத்தில் டச்சுக்காரர் கட்டின கோட்டை இருக்கிறது. இடிந்த நிலையில் காணலாம். அடுத்து, தோணித்துறையும் கடைத் தெருவும் சந்தை இடமும் இருக்கின்றன.

4. **ஊர்ப்பகுதிகள்**—ஊரின் நடுவில் உள்ளது. திருவஞ்சைக்களத்துத் திருக்கோயில். அது புல்லூற்றுப் புழையை நோக்கிக் கட்டப்பட்டுள்ளது. சந்நிதி கிழக்குப் பார்த்தது. ஊட்டுப் புறை, சத்திரம், திருக் குளம், நந்தவனம் முதலியவை கோயிலைச் சுற்றிஉள்ளன. கோயிலுக்குச் சிறிது தெற்கில் சேரமான் பரம்பு என்ற வெளியிடம் இருக்கிறது. இங்கே தான் சேரமான் அரண்மனை இருந்தது. பெருவழியில் வடக்கே ஒரு மசூதி இருக்கிறது. இது சேரமான் முசுலிம் ஆகித் திரும்பின பிறகு கட்டப்பட்டதென்பர். சிரிங்கபுரத்தில் ஆராக்குளம் என்ற நீளச் சதுரக் குளம் இருக்கிறது. ஊர்க் கோயில் குறு நில மன்னனின் ஆட்சியில் இருக்கிறது. சிறிது வடக்கே கொங்கிணியர் கோயில் ஒன்றும் உள்ளது.

5. **சிவாலயம்**—இதுவே சேரமான் பெருமாள் வழிபட்ட அஞ்சைக்களத்தப்பன் கோயில். பெரும்பாலும் மலையாள முறையில் கட்டப் பட்டுள்ளது. கீழ்ப்புறம் கோபுரம் பூர்த்தியாக உள்ளது. மேல்புறம் அடிப்பகுதி மட்டும் நிற்கிறது. பூர்த்தியாகவில்லை. சுற்றுமதில் ஆறு அடி உயரம்தான் இருக்கும். அதனுள்ளே சிறுதளிகள் 27 வரை இருக்கின்றன. அவைகளில் சிறப்பானது ஸ்ரீ கோயில் என்ற மூலத்தானம். அம்மன் கோயில், பள்ளியறை, சபாபதிசந்நிதி உட்பிராகாரத்தில் உள்ளன. க்ஷேத்திர பாலர்சந்நிதி வெளிப்பிராகாரத்தில் இருக்கிறது. மலைநாட்டுக்கோயில்களில் காணாத சில சின்னங்கள் இங்கு உண்டு. ஸ்ரீ கோயிலுக்கு முன்னிலையில் அர்த்தமண்டபமும், பள்ளியறையும் காணலாம். பள்ளியறை விழா மலைநாட்டில் இல்லை. விழாவும் நாடோறும் தொங்கு விளக்குகளோடு வெகுசிறப்பாக நடைபெறும். கீழ் நாடுகளைப்போல் வேறு சில சிவலிங்கங்களும் உண்டு. சுந்தரர் விஜயத்தினால் இவை ஏற்பட்டிருக்கலாம். சபாபதி கோயிலுள் உள்ள நடராச மூர்த்தியின் அடியில் 'திருவஞ்சைக்களம் சபாபதி' என்று தமிழில் வரையப்பட்டிருக்கிறது. இரண்டாவது சுற்றுலையில் தென்மேற்கு மூலையில் ஒரு சிறுதளியில் சுந்தரர் சேரமான் திருவுருவங்கள் ஒரே பீடத்தில் இருக்கின்றன. பிராகாரங்களுள் அனேக தீர்த்தங்கள் உள்ளன.

6. **திருவிழாக்கள்** — இக்கோயில் ஆண்டு விழா கும்பம், அதாவது மாசித் திங்களில் நடைபெறும். சுந்தரர் சேரமான் பெருமாள் திருநாள், ஆடிமாதம் சுவாதித் திருநாளில் நடக்கிறது. அண்மைக் காலம் வரை நடை பெறுதிருந்து, கோவை சேக்கிழார் திருக் கூட்டத்தாரால் தொடங்கப் பெற்று, அது முதல் ஆண்டு தோறும் நடக்கிறது. தமிழ் நாட்டிலிருந்து ஏராளமாக மக்கள் வந்து சேவிக்கிறார்கள். தற்போது தமிழ் நாட்டைப் போல வாகனங்களும் உற்சவவிக்கிரகங்களும் செய்யப் பெற்றுப் பகவதியம்யம்மன் கோயிலிலிருந்து ஊர்வலமாக உற்சவம் நடை பெறுகிறது. மலையாள நாட்டுக் கோயில் எனினும் திருவிழாக்கள் கீழ் நாட்டுச் சம்பிரதாயத்தை ஒட்டி நிகழ்கின்றன. இம்மாறுதல் குறிக்கத் தக்கது, நித்திய விழா மூன்று பூசை

களுடன் இரவில் பள்ளியறை உற்சவத்துடன் முடிவு பெறுகிறது கோயிலுக்கு ஏராளமாகச் சொத்து உண்டு. அறநிலைய அதிகாரி ஒருவர் மேற்பார்வை பார்க்கின்ருர்.

7. **வரலாறு** — பண்டைக் காலம் முதல் மலை நாடு சேர நாடு என்று வழங்கி வந்தது. சேரர் தமிழ் மூவேந்தர்களில் ஒருவர். அவர்கள் வரலாறு சங்க நூல்களில் சிறப்பாகப் பதிற்றுப்பத்தில் காணலாம். சேரமன்னர் காலம் முதல் சேரமான் பெருமாள் காலம்வரை மலை நாட்டில் வழங்கி வந்த மொழி தமிழ் ஆகும். சென்ற பத்து நூற்ருண்டுகளாக அதுமாறி மலையாளம் ஆயிற்று. சேரமான் என்ற சொல்லில் சகரம் வலிந்து ககரம் ஆகிக் கேரளம் ஆயிற்று. சேரர் தலைநகர் வஞ்சி என்று தமிழிலக்கியம் கூறுகிறது. வஞ்சி என்பதே திருவஞ்சைக்களம் என்று சில ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். அடுத்துள்ள கொடுங் கோளூர் மலைநாட்டுத் தலைநகர் என்று பெரியபுராணம் கூறும். 9-வது நூற்ருண்டில் திருவஞ்சைக்களமும் கொடுங் கோளூரும் சேர்ந்த நிலப்பகுதி சேரர் தலைநகராக இருந்தது என்பதில் ஐயமில்லை. சுந்தரர் தேவாரத்தில் "கடலங்கரை மேல் மகோதை அணியார் பொழில் அஞ்சைக்களம்" என்கிருர். மகோதைப் பட்டினம் என்பது கொடுங் கோளூருக்கு மேற்கே கடற்கரையோரம் உள்ள ஊர். இம் மூன்று ஊர்களும் சேர்ந்து பெரியநகரமாக அந்த நாளில் இருந்தது. சேரமான் என்பது அரசனின் பட்டம். கோதையார், கழறிற்றறிவார் என்பன பெயர்கள். இவ்வரசர்களில் சைவர்—சேரமான் பெருமாள். வைணவர் குலசேகராழ்வார். 9-வது நூற்ருண்டில் சுந்தர மூர்த்திகள் இந்தத்தலத்தை அணுகிச் சேரமானுடன் நட்புப் பூண்டு தேவாரத்தை அருளி யிருக்கிருர். சேரமானும் பல பிரபந்தங்களையும் உலாவையும் பாடி, இறுதியில் இருவரும் ஆடிச் சுவாதியின் போது கயிலை அடைந்திருக்கின்றனர். அது முதல் இந்தத்தலம் புகழ் பெற்று விளங்குகிறது.

8. **கல்வெட்டு** சிற்பம் முதலியவை: கோயில் மலையாள நாட்டுச் சிற்ப வகையில் உள்ளது. கருவறை கருங்கல் திருப்பணி. பல சிற்ப உருவங்கள் சுவரில் காணலாம். மேல் முகடு செம்புத்தகடு. சுற்றிலுமுள்ள மண்டபங்கள் ஓடுவேய்ந்தவை. முகடு மரங்களினுல் கட்டப்பட்டது. நிலைப்படி மானம் கருங்கல். சுற்றுலையில் நூருயிரம் விளக்குகள் வைக்க அமைக்கப்பட்டுள்ளது. முன் கோபுரம் மூன்று அடுக்கு கொண்டது. மிக உயரமானது. வெளிச் சுவர்களில் யானை, குதிரை, பறவை, மீன்கள் சித்திரிக்கப்பட்டுள்ளன. கோயிலின் கிழக்கிலும் மேற்கிலும் அரசம்பலங்கள் உண்டு. உட்பிராகாரத்தில் கருங்கல் அடித்திண்டில் வட்டெழுத்துக் கல்வெட்டுகள் உள்ளன. சேரமான் குதிரையில் ஏறினபடி கிழக்கு வாயிலில் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. கொடித்தூண் பல அடுக்குகள் கொண்ட வெண்கலக் குடங்களால் ஆக்கப்பட்டது. தென் இந்தியக் கல்வெட்டுகள் பகுதி IIIல் பக்கம் 28ல் சோழன் இராஜேந்திரன் II மலை நாடு மீது படை யெடுத்து மகோதையைப் பிடித்து அரச சின்னங்களைக் கவர்ந்ததாகக் கூறுகிறது. சேரமான் பரம்பில் தோண்டிப் பார்த்ததில் சில லிங்கங்களும் கிணறுகளும் செங்கல் கட்டிடங்களும் கிடைத்தன. திருவஞ்சைக்களத்திலும், திருக்குல சேகர புரத்திலும் உள்ள கல்வெட்டுக்களில், சில பேர்கள் கோயிலுடன் செய்து கொண்ட ஒப்பந்தங்களைப் பற்றிக் கூறப்படுகின்றன. ❋

The following particulars regarding the ownership of "THIRUKOIL", the monthly newspaper, are published, as called for, by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules, 1956.

## FORM IV
( See Rule 8 )

| | | |
|---|---|---|
| 1. Place of publication. | ... | Nungambakkam, Madras-34. |
| 2. Periodicity of publication. | ... | Monthly. |
| 3. Printer's Name. | ... | Sri. Viswas L. Paul, M/s. United Printers, Madras-1. |
| Nationality. | ... | Indian. |
| Address | ... | 3/27, Broadway, Madras-1. |
| 4. Publisher's Name. | ... | Sri. M. S. Sarangapani Mudaliar, B A .B.L., Commissioner, H R.&.C.E. (Admn.) Department. |
| Nationality. | ... | Indian. |
| Address. | ... | Nungambakkam, Madras-34. |
| 5. Editor's Name. | ... | Sri. M. S. Sarangapani Mudaliar. B.A.,B.L., |
| Nationality. | ... | Indian. |
| Address. | ... | Commissioner, H.R.&.C.E. (Admn.) Department, Madras-34. |
| 6. Name and addresses of individuals/ who own the Newspaper and partners or shareholders holding more than one percent of the total capital. | ... | Sri. M. S. Sarangapani Mudaliar, B.A.,B.L., Commissioner, H.R. & C.E. (Admn.) Department, Madras-34. |

I, M. S. Sarangapani Mudaliar, hereby declare that the particulars given above, are true to the best of my knowledge and belief.

Dated,
22—4—1964.

(Sd) M. S. SARANGAPANI MUDALIAR,
*Publisher.*



தேரழுந்தூர் ஆமருவியப்பர்



கம்பரும், அவர்தம் மனைவியாரும்
(தேரழுந்தூர்ச் சிற்பம்)

# திருவேகம்பம்

ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள், காஞ்சிபுரம்.

ஏகம்+ஆம்ரம்=ஏகாம்ரம் எனக் கொள்வது வடமொழி வழக்கு. அதனைத் (தமிழில்) ஏகாம்பரம் எனப் பகரவுயிர்மெய் இடையிட்டு வழங்குவது தமிழ் மொழிவழக்கு. 'ஏகாம்ரம்' என்பதைத் தமிழில் 'ஒருமா' என்றனர். அதனைக் ''கம்பை யணங்கினைத் தூதெனவிடுத்து வலிந்திருகத் தழீஇக் கொள்ள அமையாக் காதல் மணந்தருளிக் குறிபூண்ட ஒருமாவிற் பெருமானை வணக்கஞ் செய்வாம்'' என்னும் வாழ்த்துப் பகுதியிற் காண்க. 'ஏகாம்பரம்' என்பது 'ஏகம்பம்' எனமருவிற்று. அது 'கம்பம்' என்று மருவிற்று.

'காஞ்சி' முதலிய பெயர்களது காரணத்தை ஆராய்வதே இக்கட்டுரையின் உட்கோள் ஆதலின், இதனை அறிவோர்க்கு இது புதியதோ ருணர்வைத் தோற்றும். தோற்றினும், புலமையில்லார்க்குப் பழமைப் பற்று வருத்தத்தை விளைத்தலும் கூடும். கூடின் அதற்கு யாம் என் செய்தும்? உண்மையை வெளியிடல் வேண்டும் அன்றோ? முதலிற் 'காஞ்சி' என்னும் பெயரது காரணம் ஆராயப்படும்.

க+அஞ்சி=காஞ்சி என்று கொண்டு, நான்முகனால் வழிபடப் படுதலால், காஞ்சி என்னும் பெயர் உண்டாயிற்று இந்நகர்க்கு என்கின்றது காஞ்சிப் புராணம். இதனைக் காஞ்சிப்புராணம் ''கவ்வென்பது அயன்பேர் என்ன முந்தும் இருக்கு ஓதும். அஞ்சு என் பகுதி அடைவொடு பூசை மொழியும்'' எனப் பெயர்க்காரணம் உரைத்தது. (தலவிசேடப் படலம். பா. 26) 'அஞ்ச்' என்னும் தாது 'அஞ்சென் பகுதி' எனப்பட்டது. 'காஞ்சி' என்றதன் ஈற்றில் உள்ள இகரத்தின் வரலாறு யாது? இதற்கு விளக்கம் அதிற் குறிக்கப் பட்டிலது. இப் பெயர்ப் பொருள் நிலையை உணர்வதன் முன், ஓர் உண்மையைத் தெரிந்து கொள்வது இன்றியமையாதது. அது தெரிந்தால், தமிழ்ச் சொல்லை வட சொல்லாகக் கொண்டு பொருளுரைக்கும் பிற்கால வழக்குவெளிப்படும். வெளிப்பட்டால்தான் இக் 'காஞ்சி' க்கு யாம் உரைக்கும் பொருளை எல்லாரும் ஏற்று உவப்பர். ''கடுவாயர் தமை நீக்கி யென்னையாட் கொள் கண்ணுதலோன் நண்ணும் இடம்:— அண்ணல் வாயில் (அன்ன வாசல்?); நெடு வாயில், நிறைவயல் சூழ் நெய்தல் வாயில்; (நெய்தவாசல்) நிகழ் முல்லை வாயிலொடு ஞாழல் வாயில், மடுவார் தென் மதுரை நகர் ஆலவாயில், மறிகடல் சூழ் புனவாயில் (புனவாசல்), மாடம் நீடு குடவாயில் (குடவாசல்); குணவாயில் ஆன எல்லாம் புகுவாரைக் கொடுவினைகள் கூடா அன்றே.'' என்னுந் திருத்தாண்டகத்தில், நெய்தல், முல்லை, ஞாழல் என்னும் தாவரப் பெயர்களுள் ஒன்றாகக் கொண்டு 'ஆலவாயில்' என்பதற்குப் பொருள் உரைப்பதே பொருத்தம் ஆதல் விளங்குகின்றது.

'மதுரை, தில்லை' முதலிய ஊர்ப் பெயர்களும் 'ஆலவாய் சிற்றம்பலம்' முதலிய கோயிற் பெயர்களும் ஆகத் தனித்தனி வழங்கிய உண்மை பலர் அறிந்ததே. ''பெருக்காறு சடைக் கணிந்த பெருமான் சேரும் பெருங் கோயில்'' எனத் தொடங்குந் திருத்தாண்டகத்திலே, 'ஞாழற் கோயில்' 'கொகுடிக் கோயில்' 'ஆலக் கோயில்' என்பனவும் அன்னவையும் ஆகத் தாவரப் பெயர் குறித்தே தலப்பெயர் வழங்கலாயிற்று என்பது நன்கு புலப்படும். இவ்விரு திருத்தாண்டகத்தில் ஆலமரமே கொள்ளக் கிடத்தல் அறியற்பாலது.

பரஞ்சோதி முனிவர் பாடிய திருவிளை யாடற் புராணத்தின் மூன்ருவது காண்டத்தின் முதற்படலத்திலே 'கைப்பந்த ஆலவாயர வினைப் பார்த்து நீ இவனுக்கு இந்த மாநகர் எல்லையை அளந்து காட்டு என்ருர் வந்த யோகர்' 'அந்த வாளரா அடிபணிந்து அடி களை வேண்டும். பெரும! இந்நகர் அடிய னேன் பெயரினுல் விளங்கக் கருணை செய்தி' என்று இரந்தது. 'கருணையங் கடலும் அருள் நயந்து அனையதே ஆக' எனப் பணித்தான். உரகமும் கீட்டிசைத் தலைச்சென்று வாலை நீட்டி (மதுரை) மாநகர் வலம்பட நிலம் படிந்து உடலைக் கோட்டி (வளைத்து) வாலை வாய் (உற) வைத்து, எல்லை காட்டி மீண்டு அரன் கரத்தில் கங்கணம் ஆனது! 'சித்தர் தம் சினகரத்து (கோயிலில்) எழுந்தருளினுர். செழியன், பைத்த ஆலவாய் (பாம்பு) கோலியபடி சுவர் எடுத்து' மஞ்சு சூழ் இஞ்சி (—மதிலைத்) தென் பரங்குன்றும், வடவிடைக் குன்றும், மேலைத் திருவேடகமுங், கீழைத் திருப்பூவணமும் ஆகிய நாற்பெருவாயில்கட்கு எல்லையாக வகுத் தான். அம்மதில் ஆலவாய் மதில் ஆக வழங் கிற்று. அதனுல், அந் "நகரமும் ஆலவாய் நாமம் புனையலாயது எப்போதும்" என்று பெயர்க் காரண விளக்கம் செய்யப்பட்டிருக் கின்றது.

இங்குத் திருநாவுக்கரசு நாயனுர் அருளிய படி 'ஆலவாயில்' என்றதன் பொருள் தமிழ் நெறிக்குரியதாயிருக்கின்ற உண்மையையும், பரஞ்சோதி முனிவர்க்குக் கிடைத்த முதல் நூலின் படி ஆலவாய் என்றதன் பொருள் வட சொல்லும் தமிழ்ச் சொல்லும் கலந்த தொடரா கக் கொண்டு உரைத்ததா யிருக்கின்றதையும், ஆராய்ந்துணர்தல் அறிஞர் கடனுகும். ஆல மரத்தின் வாயில் என்பது 'ஆலவாயில்' என்ற தொடர்க்குப் பொருளாகும். விடம் பொருந்திய வாய் என்பது 'ஆலவாய்' என்றதற்குப் பொருள் ஆகும். பரஞ்சோதி முனிவர் 'வந்தயோகர் மாமண்டப மருங்கு நின்றங் கைப் பந்த வால வாயரவு' என்று பாடியதால் அவர் அப் பொருளையே கொண்டுரைத்தமை வெளிப்படையாகும். ஆகவே, 'ஆலம்' (விஷம் என்னும் வட சொல்லும், 'வாய்' என்னும் தமிழ்ச் சொல்லும் கூடியதே 'ஆலவாய்' என் னும் தொடர். ஆலவாயில் என்னும் தமிழ் வழக்கு, இவ்வாறு போலிப் பொருள் கொள்ள நேர்ந்தது குறித்துத் தமிழ்ப் புலவர் வருந்தா மல் இரார்.

அங்ஙனமே 'காஞ்சி' என்றதன் பொரு ளும் காஞ்சிப் புராணத்திற் கொள்ளப் பட்டிருக் கின்றது.

'காஞ்சி' என்பது மருதநிலத்து மரங்களுள் ஒன்று. அது காஞ்சிப் புராணத்தில், திரு நாட்டுப் படலத்துள், மருதவளம் கருதவந்த பகுதியில், "கரைத்துறு தண்பூங்காஞ்சிகள் சாகைக் கரம் ஓச்சி விரைத்த கரும்பைத் தைவரு தோற்றம் விரி"த்த இடத்தில் தெரித்த வருணனைக் குரியதாயிற்று. இக் 'காஞ்சி' என் னும் பெயர்க்கு அது காரணமாகக் கொள்ளப் பட்டிலது.

ஊர்ப் பெயர்கள் நெல் முதலிய தானியங் களையும், கொள் முதலிய தவசங்களையம், புல் முதலிய (செடி கொடி முதலிய) தாவரங்களையும், இரும்பு செம்பு பொன் முதலிய பிறவற்றையும் குறித்து உண்டாயவை. நெல்லூர், புல்லூர், பயற்றூர், காரைக்கால், காரைக்குடி, முல்லை வாயில், அரசூர், அரசங்குப்பம், ஆலப்பாக்கம் ஆலங்காடு, ஆலம்பொழில், இலுப்பூர், இலுப்பை, இலவம்பாக்கம், இறுங்கூர், ஈச்சங் காடு, ஈச்சனூர், ஈந்தூர், உளுந்தூர், உளுத் தங்குப்பை, எருக்கூர், ஒதியனூர், ஒலவங் காடு, கடுவனூர், காஞ்சி (கடலாடி), புளியம் பாக்கம், வேப்பூர், வேலங்காடு, மாங்காடு, மாம்பாக்கம், வன்னியூர், நாவலூர், அத்தி யூர், மருதூர், இரும்பூர், செம்பூர், பொன்னூர், முதலிய தமிழ்ப்பெயர்களை எண்ணிக்கொண்டு 'காஞ்சி' என்ற தமிழ்ப்பெயர்க்கும் பொருள் காண்டல் வேண்டும். 'காஞ்சி' என்பது ஊர்ப் பெயர். அது திசைமுகனுல் வழிபடப்பட்டிலது. அவன் வழிபடப் பெற்றது சிவம். அதைக் காஞ்சி என்பார் எவரும் இலர். ஊர் காஞ்சி. அவ்வூர் நாப்பண் வயங்குவது கோயில். அதனில் சோதிலிங்க வடிவமாகி அமர்ந்தது சிவம் (தல விசேடப் படலம். பா 26—28 பார்க்க). ஊர், கோயில், கடவுள் என்னும் மூன்றற்கும் தனித் தனிப் பெயர் உளது. காஞ்சி என்பது ஊரின் பெயர். திரு வேகம்பம் என்பது கோயிலின் பெயர்- ஏகாம் பர நாதர் என்பது கடவுளின் பெயர். காஞ்சி என்பதற்குப் பிரமனுல் பூசிக்கப்பட்டது என்று பொருள் கொண்டால், ஏகாம்பர நாதரையே

கொள்ள வேண்டும். ஆகுபெயராய்க் கோயிலைக் கொள்ளல் வேண்டும். மீண்டும் ஆகு பெயராக ஊரைக் குறிக்கத் தகும். 'மாமதிற்கச்சி மாநகர்' என்பது திருஞான சம்பந்தர் திருவாக்கு. நகருள் ஏகம்பம் என்பது வழக்கு. காஞ்சி—கஞ்சி—கச்சி என மருவிற்று. மருவியதால்தான், காஞ்சியைக் கச்சி என்னுஞ் சொல் குறிக்கின்றது. கச்சி வேறு காஞ்சி வேறு ஆயின், 'கச்சித் திருவேகம்பம்' என இடமும் இடப் பொருளும் ஆக வழங்கலாகாது. கச்சி என்பது மிக்க பழைமையுடைய வழக்கே. காஞ்சியைக் கச்சி எனலும் கச்சியைக் காஞ்சி எனலும் பொருந்தும். திருவேகம்பத்தைக் காஞ்சி எனலும் காஞ்சியைத் திருவேகம்பம் எனலும் இல்லை. கச்சியேகம்பம், கச்சியேகம்பன் என்னும் வழக்கமே அதை உணர்த்தும்.

கச்சித்திருவேகம்பம், கச்சித்திருமேற்றளி கச்சிக் கச்சாலைக் கனி, கச்சியநேகதங்காவதம், கச்சித் திருநெறிக் காரைக்காடு, 'கச்சி மூதூர்க் காமக்கோட்டம்' என்னும் வழக்குண்மையால், கச்சி என்னும் பெயர் நகர் முழுதுக்கும் உரிய பொதுப் பெயராகும். சைவத்திற்கே அன்றி வைணவத்திற்கும் அப்பெயர் உரியது. திவ்விய பிரபந்தத்துள், 'கச்சியூரகத்தாய்' 'மதிற்கச்சியூராய்' 'கச்சிவெஃகா' 'மதிட்கச்சி வேளுக்கையாளரி' 'மதிள்கச்சியூரகமே' 'கச்சிமேயகளிறு' என்றுள்ளன. 'காமருபூங் கச்சி மணிவண்ணா' என்று தனிப் பாடலுள்ளும் உளது. இக் கச்சி வடகச்சி தென்கச்சி என இரு பகுதியாக வழங்கப்பட்டது. திருஞான சம்பந்த சுவாமிகள் 'வடகச்சி' என்று குறித்தருளினார்கள்.

காஞ்சியும் கச்சியும் ஒன்று என்பதற்கு வேறொரு காரணமும் உண்டு. 'காஞ்சி' என்பது மரம் என முன்னர்க் குறித்தேம். அம் மரத்திற்குரிய அடையைக் காஞ்சிக்கும் கச்சிக்கும் ஒப்பக் கொடுத்து நம் முன்னோர் கூறினதும் அதற்கொரு காரணம் ஆகும்.

''குருந்தம் மல்லிகை கோங்கு மாதவி நல்ல குராமரவம் திருந்துபைம் பொழிற் கச்சியே கம்பம்'' ''சேணுலாம் பொழிற்கச்சியேகம்பம்'' 'கலிக்கச்சிமா நகருள் மரவம் சூழ்பொழில் ஏகம்பம்' 'பொழில் சூழ்ந்த கச்சியேகம்பம்' 'ஏரார் பூங்கச்சி' 'அந்தண் பூங்கச்சி' 'செறிதீம் பொழிற்கச்சியே கம்பம்'' 'கந்தமார் பொழில் சூழ்தருகம்பமே' 'காமருபூங்கச்சி' என்பவை, கச்சி என்பது பூமரம் என்றுணர்த்துவன. 'கடிபொழிலேகம்பம்'' 'பூம்பொழில் சூழ்கச்சியே கம்பம்' என்றுள்ளவற்றின் அமைதிக்கு இலக்கணம் வேறுகும். ஆதலின் அது குறித்து ஈண்டு ஆராய்ச்சி இல்லை.

''காஞ்சி மாநகர்தன்னுள்ளால் ஏலநற் கடம்பன்றந்தை யிலங்குமேற்றளியனாரே'' (2) ''காஞ்சிமாநகர் தன்னுள்ளால்......மேற்றளியனாரே'' (6, 7, 8, 10) 'அணிபொழிற் கச்சி தன்னுள் இலங்கு மேற்றளியனாரே' (9) என்று காஞ்சியையும் கச்சியையும் ஒரு பொருளில் வைத்துக் குறித்தருளிய நம் அப்பர் திருவாக்கை ஓர்ந்து உண்மையை அறிதல் வேண்டும். சுந்தரமூர்த்தி சுவாமிகள், ''பாரூர் பல்லவனூர் மதிற்காஞ்சி மாநகர்வாய்ச் சீருரும்புறவிற்றிரு மேற்றளிச் சிவன்'' என்றருளியதாலும் அது தெளிவாயிற்று. ஆகவே காஞ்சி என்பதும் கச்சி என்பதும் வேறல்ல. 'காஞ்சி' என்பதே 'கஞ்சி' எனக் குறுகிக் 'கச்சி' என வலித்தலாந்திரிபுற்றது. 'கஞ்சி' என்னும் வழக்குண்மையை யாவரும் அறிவர். இம்மரூஉவும் நெடுங்காலத்திற்கு முன்னதே யாகும். அதனால் இதன் தொன்மை புலப்படும்.

நகரமுழுதும் 'காஞ்சி' என்று வழங்கியதால்தான் 'பெருங்காஞ்சி' 'சிறுகாஞ்சி' எனப் பிரித்து வழங்கும் நிலை உண்டாயிற்று. 'பிறைத் துண்டவார் சடையாய் பெருங்காஞ்சி யெம் பிஞ்ஞகனே' என்றருளிய வாகீசர் திருவாக்கும் அக்காஞ்சியைப் பிரித்துப் 'பெருங் காஞ்சி' என்று வழங்கிய உண்மையை உணர்த்திற்று. 'பெருங் காஞ்சி' என்பது பிறிதினியைபு நீக்கிய அடையுடையது ஆதலின், சிறுகாஞ்சி என்ற வழக்குண்மையும் புலனாயிற்று. அது இக்காலத்தில் 'சின்ன காஞ்புரம்' என்று வழங்குவதால் தெரிகிறது. பெரிய காஞ்சிபுரம் என்ற வழக்கும் பெரியது. காஞ்சியைப் பன்னிரு பெயருள் ஒன்றுகக் கூறிக் கச்சியைக் கூறுததும் இரண்டும் ஒன்றெனக் காட்டும்.

இனி இங்குச் சில கருத்துக்களை உணர்வது இன்றியமையாதது. அவற்றை உணர்ந்தால்தான் இக்கட்டுரையின் உட்கோள் இனிது புலப்படும்.

1. 'காஞ்சீபுரம்' எனத் தீர்க்கம் உற்றது தமிழ் வழக்கன்று.

2. 'காஞ்சி' என்பது முதற்குறுக்கம் உள்ளதும், 'ஏகாம்பரம்' என்பதில், இல்லாத பகரம் இடையில் உள்ளதும், நெடில் குறிலானதும், இருந்த ரகரம் அற்றதும் உளங்கொள்ளத் தக்கன. ஏகம்பம் என்று மருவியவாறு இதுவே. 'ஆம்ரம்' என்பது வடசொல். அதன் பொருள் 'மா' மரம் (ஆம்ரபலம்—மாம்பழம்) ஏகாம்பரம்- ஒருமா.

3. காஞ்சிக்குச் சிறப்பு, காமாட்சியம்மை வழிபட்டதா? பிரமன் பூசித்ததா? பிரமன் பூசித்தது சிறப்பாயின், அது தென்பாலும், அம்மை பூசித்தது திருமூலத் தானத்திலும் அமைதல் தக்கதோ? திருமூலத்தானத்துப் பெரிய கம்பம் ஒன்றே பிரதானமாக அமைந்து ஏனைக்கம்பங்கள் பிராகாரத்திலே அமைந்திலங்கும் அதுவே, காமக் கோட்டியம்மை வழிபட்டது சிறப்பினது என்னும் உண்மையைக் காட்டுகின்றது. அதனால் நான்முகன் வழிபட்டது சிறப்புடையது அன்று என்றும், அக் காஞ்சி என்றதற்குப் பிரமனால் அஞ்சிக்கப் பட்டது என்று கூறிய பொருள், அக்காஞ்சி என்னுந் தமிழ்ச் சொல்லை வட சொல்லாகக் கொண்டுரைத்த பொய்ப் பொருளும் பொருந்தாப் பொருள் கோளும் ஆகும் என்றும், அறிஞர் கொள்வது தக்கது.

4. பிரமன் பூசித்ததாற் 'காஞ்சி' என்று பெயர் பெற்றது போல, மாயனும் உருத்திரனும் பூசித்ததாற் பெற்ற பெயர்கள் உளவோ? அவை யாவை? 'மும்மூர்த்திவாசபுரம்' 'விண்டுபுரம்' 'பிரமபுரம்' என்பவற்றின் வேருகப் பிரமனைக் குறித்து மட்டும் தனியே 'காஞ்சி' என்று ஏன் வழங்குகிறது?

5. காமாட்சியம்மை வழிபட்டதே காஞ்சி நகரச் சிறப்புக்கு ஏது ஆதலின், அது காரணமாக உண்டான பெயர் என்ன? இதை ஆராய்ந்தறிவது நன்று. கன்னிகாப்பு, என்பதற்குக் கூறிய காரணம் இரண்டனுள் அவ் வழிபாட்டுக் காரணம் குறிக்கப்பட்டிலது. 'தபோமயம்' என்பது அதனை அறிவிப்பது ஆயினும், அது 'காஞ்சி'யைப் போலப் பயின்றதன்று. 'தபோமயம்' என்றது உலக வழக்குமன்று, 'காஞ்சி' என்பது உலக வழக்கும் செய்யுள் வழக்கும் ஆகும்.

இதுவரையில் எழுதியவற்றால், 'காஞ்சி என்பது தமிழ்ச் சொல் என்றும், அது மரப் பெயர் என்றும், அது காரணமாக நகர்க்குப் பெயராயிற்று என்றும், வடமொழியிற் புராணம் இயற்றிய பாவலர் 'காஞ்சிபுரம்' எனக் கொண்டு அம்மொழி மரபிற்குத் தகப் பொருளுரைத்தனர் என்றும், அதை அவ்வாறே ஏற்று, மொழி பெயர்த்துப் பாடிய தமிழ்க் காஞ்சிப் புராண நூலுடையாரும் தமிழ்ப் பெயரென்று யாண்டும் காட்டாது பொருளுரைத்தனர் என்றும், காஞ்சியும், கச்சியும் ஒன்றென்றும், 'கஞ்சி' 'கச்சி' என்னும் வழக்கம் 'காஞ்சி' என்றதன் மரூஉ என்றும், 'ஏகம்பம்' என்றதன் உண்மைநிலை இஃது என்றும் 'வட கச்சி' தென்கச்சி, 'பெருங்காஞ்சி' சின்னகாஞ்சி என இரு பிரிவு கொண்டிருந்து வரும் பழமை யுடையது என்றும் புலப்படும். அடுத்த கட்டுரையில் 'கம்பம்' என்றதன் உண்மைப் பொருள் விளக்கி யெழுதப் படும்.

---

## நடைபெற்ற நிகழ்ச்சிகள் :

| | |
|---|---|
| ஸ்ரீ சண்பகாம்பிகை சமேத ஸ்ரீ திருவேட்டீஸ்வரர் கோயில், திருவேட்டீஸ்வரன் பேட்டை, சென்னை-5. | பிரம்மோத்ஸவம் |
| ஸ்ரீ பிரகதம்பாள் சமேத திருக்கோகர்ணேஸ்வரர் கோயில், திருக்கோகர்ணம், புதுக்கோட்டை. | சித்திரைப் பெருந்திருவிழா |
| ஸ்ரீ தண்டுமாரியம்மன் தேவஸ்தானம், உப்பிலிபாளையம், கோவை. | பிரம்மோத்ஸவம் |
| ஸ்ரீ ரங்கநாயகி சமேத ஸ்ரீ உத்திர ரங்கநாதஸ்வாமி ஆலயம், பள்ளிகொண்டா, வடஆற்காடு ஜில்லா. | பிரம்மோத்ஸவம் |
| ஸ்ரீ பூலாநந்தீஸ்வரர் தேவஸ்தானம், சின்னமனூர், மதுரை மாவட்டம் | சித்திரைத் திருவிழா |
| ஸ்ரீ காளத்தீஸ்வர சுவாமி தேவஸ்தானம், ஸ்ரீ அபிராமி ஸமேத பத்மகிரீஸ்வர சுவாமி கோயில், திண்டுக்கல். | பிரம்மோத்ஸவம் |
| ஸ்ரீ கங்காதரேச்சுவரர், ஸ்ரீ வரதராசப் பெருமாள் திருக்கோயில், சின்னசேலம், | குடமுழுக்கு (கும்பாபிஷேகம்) |

# கீதா ஸாரம்

காரப்பங்காடு ஸ்ரீ வேங்கடாச்சார்ய சுவாமிகள், மயிலாப்பூர்.

## துரியோதனன் நிலே (2)

ஸ்ரீ பார்த்தஸாரதி அருளிச் செய்த கீதா சாஸ்திரம் 'அனைவரும் உய்வு பெற அருளிய நன்னூல்' என்பதைக் கண்டோம். இனி, அக்கீதா சாஸ்திரத்தில் முதல் அத்தியாயத்தின் முற்பகுதியில் கூறப் பெற்றிருக்கும் துரியோதனன் நிலையைக் காண்போம்.

திருதராஷ்டிரன் ஸஞ்ஜயனைக் குறித்து, முதன் முதலில் வினவிய சுலோகம் பின்வருமாறு:

"தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ:|
மாமகா: பாண்டவாச்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய?||"

இதன் கருத்து:

"ஓ ஸஞ்ஜயனே! தருமம் விளையும் விளைநிலமான குருக்ஷேத்திரத்தில் என்புத்திரர்களான துரியோதனன் முதலானோரும், பாண்டுவின் புத்திரர்களான தருமபுத்திரன் முதலானோரும், போர் புரிய விருப்ப முற்றவராய் ஒன்று சேர்ந்தார்களே, அவர்கள் என்ன செய்தார்கள்?" இவ்வாறு வினவும் திருதராஷ்டிரன் உட்கருத்து என்? என்னில், தருமபுத்திரன் முதலானோர் இயல்பாகவே தருமம் செய்வதில் ஊற்றமுடையவராவர்; அதருமம் செய்வதில் அவர்கள் மனம் சிறிதும் செல்லாது. அங்ஙனமான மனம் பெற்ற அவர்கள் போர் செய்ய விருப்பமுற்று, குருக்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்தவர்களாய் இருப்பினும், அந்த க்ஷேத்திரம், தருமம் விளையும் நிலமாய் இருத்தலின், அதின் மஹிமையினால் போர்வேண்டாமென்று எண்ணி, விலகிச் சென்று விட்டார்களா? அல்லது பாவம் செய்வதில் நெஞ்சுடையவர்களான என் மகன் துரியோதனன் முதலானோர் போர் புரிய விருப்ப முற்று அங்கு வந்து சேர்ந்திருப்பினும், அந்த க்ஷேத்திரத்தின் மஹிமையினால் போர் புரிதல் கூடாது என்றெண்ணி விலகிச் சென்று விட்டார்களா? என்பது.

இங்கு, மேற் கூறிய உட்கருத்து நெஞ்சில் படுமாறு ஓர் உதாரணம் காட்டப் படுகிறது. இராமபிரானுக்கு முடிசூட முகூர்த்தம் வைத்திருக்குங்கால், கூனி என்பவள் தடையைச் செய்து, அம் முகூர்த்தத்தில் அது நடைபெறாதவாறு செய்தனள் என்பது இதிஹாஸ ப்ரஸித்தம். இங்கு ஒரு வினா எழக் கூடும். இராமபிரான் திருவவதார ஸ்தலமாகிய திரு அயோத்திமா நகரத்திற்கு ஓர் இயல் புண்டு. அவ்வியல்பாவது அயோத்திமா நகரில் உள்ளார் அனைவருக்கும் இராமபிரான் திறத்து அன்பை உண்டு பண்ணுதல் என்பது. இதை 'நிலமிதி' 'மண்பாடு' என்னும் சொற்களால் கூறுவர். உண்மை இங்ஙனம் இருக்க, கூனி முடி சூட இடங் கொடாமல் தடையைச் செய்தாள் என்பது எங்ஙனம்? அவளும் அயோத்திமா நகரில் உள்ளவள் அன்றோ? அவளுக்கு மாத்திரம் இராமபிரானிடத்தில் அன்பு இல்லாமைக்குக்காரணம் என்?" இவ்வினாவிற்கு இராமபிரான் சரிதத்தை உள்ள படி உணர்த்திய வால்மீகி மாமுனிவன் வெகு அழகாக விடை அளித்திருக்கிறான். "ஜ்ஞாதி தாஸீ யதோ ஜாதா" என்பது அம் முனிவனது (விடை அளிக்கும்) அவ்வாக்கியமாகும். கூனி என்பவள் அயோத்திமா நகரில் பிறந்து வளர்ந்தவள் இல்லை. எங்கேயோ பிறந்து எங்கேயோ வளர்ந்தவள். (யதோஜாதா—யத்ரகுத்ர சித் ஜாதா என்பது இங்கு வியாக்கியானம்). உண்மையில் ஏனையோரைப் போன்று, கூனி அயோத்திமா நகரிலேயே பிறந்து வளர்ந்தவளாய் இருப்பின், இராமபிரானிடத்தில் சிறந்த அன்பு உடையவளாகவே இருப்பள்; முடி சூடத் தடை செய்திருக்க மாட்டாள்—

என்பது இங்கு ஸாரமான கருத்து. இதனுல், திரு அயோத்திமாநகரத்திற்கு இராமபிரான் திறத்து அன்பை உண்டாக்குதலே இயல்பு என்பது தெளிவு. இது போன்று, குருக்ஷேத்திற்குத் தருமத்தில் ருசியை உண்டாக்குதலே இயல்பு என்னும் ஸாரத்தை, திருதராஷ்டிரன் நெஞ்சில் கொண்டு மேற்கூறியவாறு வினவினதாக இங்கு நாம் அறிதல் நன்ரும்.

இவ்வினுவிற்கு விடையளிக்கும் ஸஞ்ஜயன் சில சுலோகங்களில் துரியோதனன் நிலையை, வியாஸர் அருளிய ஞானக்கண்களால் கண்கூடாகக் கண்டு கூறியிருக்கிருன்:—

துரியோதனன் என்னும் அரசன் பாண்டவர் ஸேனையைக் கண்டு, துரோணுசாரியரைக் கிட்டி, பின் வருமாறு சொன்னுன். "சிறந்த அறிவுள்ளவனும், தேவரீர் சிஷ்யனும், துருபத புத்திரனுமான திருஷ்டத்யும்னன் என்பவனுல் அணிவகுக்கப் பெற்றுள்ள பாண்டவர் சேனையைப் பாரும். இந்த சேனையில், பீமன், அர்ச்சுனன் இவர்களோடு ஒத்தவர்களும், சூரர்களும், பெரிய வில்லாளிகளுமான யுயுதானன், விராடன், துருபதன், திருஷ்டகேது, சேகிதானன், காசீராஜன், புருஜித், குந்திபோஜன், சைப்யன், யுதாமன்யு, உத்தமௌஜஸ், அபிமன்யு, திரௌபதியின் புத்திரர்கள் ஆகிய எல்லோரும் இருக்கிருர்கள். என் ஸேனையில் சூரர்களான சிறந்த வில்லாளிகள், (துரோணுசாரியராகிய) தேவரீர், பீஷ்மர், கர்ணன், கிருபர், அச்வத்தாமன், ஸோமதத்தன் மகனுன பகதத்தன் இவர்களும் மற்றும் சிலரும் இருக்கிருர்கள்.

"அபர்யாப்தம் ததஸ்மாகம் பலம்
பீஷ்மா பிரக்ஷிதம் |
பர்யாப்தர் த்விதமேதேஷாம் பலம்
பீமாபிரக்ஷிதம் ||

ஆதலின், பீஷ்மரால் காப்பாற்றப்பெற்ற நம் ஸேனை போதாது. (பாண்டவர் ஸேனையை ஜயிக்கச் சக்தியற்றது) பீமனுல் காப்பாற்றப் பெற்ற இந்தப் பாண்டவ ஸேனையோ போதுமானது (நம்மை ஜயிக்கத் திறமை உள்ளது). நீங்கள் அனைவரும் பீஷ்மரை எல்லா வழிகளிலும் இரக்ஷிக்கக் கடவீர்" என்றனன்.

இதைச் செவியேற்றவரும், பராக்கிரமம் உள்ளவரும், குரு வமிசத்தில் பிறந்தவருள் வயது சென்றவரும், பாட்டனரும் ஆகிய பீஷ்மர், மேற்கூறியவாறு துன்புற்றிருக்கும் துரியோதனனுக்குச் சந்தோஷத்தை உண்டாக்குவதற்கு, ஸிம்ம கர்ஜனத்தைச் செய்து, தன் சங்கத்தையும் ஊதினுர். பின்பு, ஸ்ரீபார்த்தஸாரதியும் அர்ச்சுனனும் முறையே, பாஞ்சஜன்யம் என்னும் சங்கத்தையும், தேவதத்தம் என்னும் சங்கத்தையும் ஊதினுர்கள். தருமபுத்திரன் முதலானுரும் தம் தம் சங்கங்களை ஊதினுர்கள். எங்கும் பரவிய அந்தச் சப்தம் துரியோதனுதிகளுடைய ஹிருதயங்களைப் பிளந்தது—என்று.

'அபர்யாப்தம் ததஸ்மாகம்' என்னும் சுலோகத்திற்கு, மேற்கூறியவாறின்றி, சிலர் வேறு விதமாக்க் கருத்தைக் கூறியிருக்கின்றனர்.

அக்கருத்தாவது:—பீஷ்மரால் காப்பாற்றப் பெற்ற நம் ஸேனையை அந்த ஸேனை கொல்ல, சக்தியற்றது. நம்முடைய இந்த ஸேனையோ, பீமனுல் காப்பாற்றப் பெற்ற அவர்கள் ஸேனையைக் கொல்லச் சக்தி யுற்றது-என்பது.

இவ்வாறு கருத்துக் கூறுவது பொருந்தாது. இங்கு, பின் கூறப்பெறும் விஷயங்கள் காணத்தக்கன.

1. துரியோதனன் தன் ஸேனையை, பீஷ்மரால் காப்பாற்றப் பெற்றுள்ளதாகக் கூறுவது போல், பாண்டவர் ஸேனையை, பீமனுல் காப்பாற்றப் பெற்றதாகக் கூறியதற்குக் காரணம் என்ன என்பதை, இங்கு முதலில் ஆராய்ந்து உண்மையை அறிதல் பொருத்தமாகும். பீஷ்மர் துரியோதனனுடைய ஸேனைக்கு ஸேனுதிபதியாய் இருப்பது போன்று, பீமன் தருமபுத்திரர் ஸேனைக்கு ஸேனுதிபதியாய் இருப்பதால், தன் ஸேனைக்குப் பீஷ்மரையும், பாண்டவர் ஸேனைக்குப் பீமனையும் முக்கியமாக வைத்துச் சொன்னுன் என்பதற்கு இடமில்லை; பாண்டவர் ஸேனைக்குப் பீமன் ஸேனுதிபதியாய் இன்றி, திருஷ்டத்யும்னன் ஸேனுதிபதியாய் இருத்தலின்.

பீஷ்மருக்கு ஸமானமான பலம் உள்ளவன் பீமன் என்பது பற்றி, துரியோதனன் அங்ஙனம் கூறினுன் என்பதற்கும் பொருத்தம் இல்லை; பீஷ்மரே மிக்க பலம் உடையவர்;

(சக்தோஹம் தநு ஷைகேந நிஹந்தும் ஸர்வ பாண்டவாந்। யத்யேஷாம் நபவேத் கோப்தா விஷ்ணு: காரணபூருஷ:॥) தருமபுத்திரன் முதலான இப்பாண்டவர்களுக்கு, இவ்வுலகத்திற்குக் காரண புருஷனும் எங்கும் நிரம்பி இருப்பவனுமான கிருட்டிணன் காப்பாற்றுகிறவனாக இல்லாமல் இருப்பின், நான் ஒரு வில்லால் பாண்டவர்கள் அனைவரையும் கொல்லச் சக்தியுற்றவன் என்று பீஷ்மர் கூறியிருப்பதால்.

பஞ்சபாண்டவர் ஸேனைக்குப் பீமன் எஜமானன் என்பது பற்றித் துரியோதனன் அவ்வாறு கூறினான் என்பதும் சரியன்று; அந்த ஸேனைக்குத் தருமபுத்திரனே எஜமானனாய் இருத்தலின்.

பாண்டவர் ஸேனையில் இருக்கும் சிறந்த வீரர்களுள், பீமன் முக்கியன். ஆதலின், அவ்வாறு கூறினான் துரியோதனன் என்று கூறவும் இயலாது; அந்த ஸேனையின் வீரர்களுக்குள் அர்ச்சுனனே முக்கிய வீரனாய் இருக்கின்றமையின்.

ஆனால், துரியோதனன் பீமனை முக்கியமாக வைத்துக் கூறியதற்குக் காரணம், பீமன் துரியோதனன் முதலிய நூற்றுவரைக் கொல்லுவதாகப் பிரதிஞ்ஜை பண்ணி, அங்ஙனமே நிறைவேற்று வதாக உறுதியுடைய வனாயும், அவ்வாறு நிறைவேற்றத் தக்க ஸாஹஸம், பலம் ஸஹாயங்கள் ஆகிய வற்றைப் பெற்றிருக்கின்றவனாயும் இருப்பதேயாம். இதனால், மாரீசனுக்கு இராமபிரான்பால் அச்சமும் கம்ஸனுக்குக் கண்ணபிரான்பால் அச்சமும் போன்று, 'துரியோதனனுக்குப் பீமனிடம் அச்சம் உண்டு' என்பது தெளிவாம்.

தன்ஸேனையில் பீஷ்மரை, பீமனுக்கு எதிராக வைத்து, துரியோதனன் கூறியதற்குக் காரணம்-பீஷ்மர் பாண்டவர் ஐவரையும் காப்பாற்றுவதில் மிகவும் ஆசையுடையவர் என அறியப்பட்டவராய் இருப்பதேயாம். இவ்வாறு, பீமன் திறத்தில், துரியோதனனுக்கு உள்ள பயமும், பீஷ்மரிடத்தில் உள்ள ஐயமும், 'பீமாபிரக்ஷிதம்' 'பீஷ்மாபி ரக்ஷிதம்' என்ற பதங்களில் அறியக் கிடக்கின்றன.

(2) மேலும், துரோணாசாரியரைக் குறித்து, துரியோதனன் கூறுமிடத்து, பாண்டவர் ஸேனைக்கு ஆற்றல் அதிகம் என்னும் உண்மையை, பின்குறிக்கப் பெறும் பகுதிகளில் உணர்த்தி-யிருக்கிறான்.

(a) (பாண்டு புத்ராணும் ஏதாம் மஹதீம் சமூம் பச்ய). பாண்டவர்களின் இந்தப் பெரிய சேனையைப் பாரும்.

(b) (தீமதா தவ சிஷ்யேண த்ருபத புத்ரேண வ்யூடாம் பாண்டு புத்ராணும் ஏதாம் சமூம் பச்ய) சிறந்த அறிவுள்ளவனும், தேவரீர் சிஷ்யனும், துருபதமஹா ராஜாவின் புதல்வனுமான திருஷ்டத்யும்னனால் அணிவகுக்கப் பெற்றுள்ள பாண்டவரின் இந்த ஸேனையைப் பாரும்.

(c) (அத்ர சூரா மஹேஷ்வாஸா..........
ஸௌபத்ர: த்ரௌப தேயாச்ச ஸர்வ ஏவ மஹாரதா:)

இப்பாண்டவர் ஸேனையில் பீமன், அர்ஜ்ஜுனன் இவர்களோடு ஒத்தவர்களும், இவர்களோடு சேர்ந்தவர்களுமான, சூரர்களான யுயுதானன் முதலிய பெரிய வில்லாளிகள் இருபது பேர் இருக்கின்றனர்.

(3) அன்றியும், தன்சேனைக்கு ஆற்றல் அல்பம் என்னும் உண்மையையும் துரியோதனன் துரோணா சாரியருக்கு உணர்த்தி யிருக்கின்றான். இதற்குக் காரணம் பின்வருமாறு:

பாண்டவர் சேனையை (மஹதீம் சமூம்) பெரிய சேனை என்று புகழ்ந்து கூறியிருப்பது போன்று, தன்சேனையைப் புகழ்ந்து கூறவில்லை. (த்ருபத புத்ரேண வ்யூடாம்) திருஷ்டத்யும்னனால் அணிவகுக்கப் பெற்ற என்று புகழ்ந்து கூறியிருப்பது போன்றும் தன் சேனையைக் கூறவில்லை. தன் சேனையில், துரோணர், பீஷ்மர், கர்ணன், கிருபர், அச்வத்தாமன், விகர்ணன், பகதத்தன் ஆக ஏழு வீரர்களை உள்ளவர்களாகக் கூறியிருக்கிறான். ஏனைய வீரர்களைக் கூறும்போது (மதர்த்தே த்யக்த ஜீவிதா:) எனக்காகப்பிராணனை விட்டவர்கள் என்று கூறியிருக்கிறான்.

(4) இன்னமும், துரோணாசாரியரைக் குறித்து, துரியோதனன் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட பீஷ்மர், துரியோதனன் நிலையை (துன் புற்றிருக்கும் நிலையை) நன்கு உணர்ந்து, அவனுக்கு அத்துன்பம் போய், சந்தோஷம்

உண்டாவதற்கர்க், ஸிம்மநாதத்தைச் செய்து, சங்கத்தை ஊதினர் என்னும் கருத்தைக் கூறும் 'தஸ்ய ஸஞ்ஜனயந் ஹர்ஷம்' என்னும் பகுதியும் இங்கு அவசியம் நோக்கத் தக்க தாகும். இதனால், பீஷ்மர் ஸிம்ம நாதத்தைச் செய்து, சங்கை ஊது வதற்கு முன்பு, துரியோ தனன் மிகவும் துன்ப முற்றிருந்தான் என்பது மிகத்தெளிவு.

(5) இன்னும், பின்வரும் விஷயத்தையும் இங்குக் காணுதல் நன்ரும். ஒரு சுலோகத் திற்கோ அல்லது ஒரு வாக்கியத்திற்கோ 'இன்னது கருத்து' என்று கருத்தை அறுதியிடும் போது அவ்வாறு அறுதியிட அனேக முறை கள் உண்டு. அம் முறைகளுள், 'ஸந்தம்ச ந்யாயம்' என்பது ஒரு முறையாகும். இம் முறையை, பின்வரும் இடத்தில் ஜ்யோதிர்வித் துக்கள் தெவிக்கிருர்கள்.

இரண்டு சுபகிருஹங்களின் இடையில் ஒரு பாப கிருஹம் இருக்குமேயானல், அப்பாபகிரு ஹத்தைச் சுபகிருஹமாகவும், இரண்டு பாப கிருஹங்களின் இடையில் ஒரு சுபகிருஹம் இருக்குமேயானல், அச்சுபகிருஹத்தைப் பாப கிருஹமாகவும் கொள்ளுதல் வேண்டும். விருஷ பத்தில் சந்திரனும், கர்க்கடத்தில் குருவும், மிதுனத்தில் ராகுவும் இருப்பர்களே யானல், அந்த ராகுவை சுபகிருஹமாகவும், விருஷபத் தில் அங்காரகனும் கர்க்கடத்தில் சனியும், மிதுனத்தில் குருவும் இருப்பர்களேயானல், அந்தக் குருவைப் பாபகிருஹமாகவும் கொள்ளு தல் வேண்டும்.

இது போன்று, துரியோதனன் திருஷ்டத் யும்னனல் அணி வகுக்கப் பெற்றுள்ள பெரிய சேனையைப் பார்த்துக் கலங்கினன் என்னும் கருத்து இச்சந்தர்ப்பத்தில் முதலில் தெரிகிறது. முடிவில், ஸ்ரீ பார்த்தசாரதி முதலானரின் சங் கத்வனி, துரியோதனன் முதலானருடைய ஹிருதயங்களைப் பிளந்து விட்டதாய்த் தெரி கிறது. இடையில் உள்ள. 'அபர்யாப்தம் ததஸ் மாகம்'என்னும் சுலோகத்திற்கு முன்பின் கூறப் பெற்றுள்ள கருத்துக்களுக்கு இணங்க, ''ஆதலின் பீஷ்மரால் இரக்ஷிக்கப் பெற்றுள்ள சேனை (பாண்டவர் சேனையைக் கொல்ல) போதாது. பீமனல் இரக்ஷிக்கப் பெற்றுள்ள சேனை (துரியோதனன் சேனையைக் கொல்ல) போதும் என்று முற்கூறிய கருத்தைக் கொள் வதே மிகப் பொருத்தமாம். ''இக்கருத்தையே 'அபர்யாப்தம் ததஸ்மாகம்' என்னும் சுலோகத் திற்குக் கொள்ளுதல் வேண்டும்'' என்பதை நம் ஸ்வாமி ஸ்ரீராமாநுஜர், '' துர்யோதன: ஸ்வய மேவ பீமாபிரக்ஷிதம் பாண்டவானும் பலம் ஆத்மீயம்ச பீஷ்மாபிரக்ஷிதம் பலம்அவலோக்ய ஆத்மவிஜயே தஸ்ய பலஸ்ய பர்யாப்ததாம் ஆத்மீயஸ்ய பலஸ்ய தத்விஜயேச அபர்யாப் ததாம் ஆசார்யாய நிவேத்யச அந்தர் விஷண் ணேபவத்'' என்னும் வாக்கியத்தினல் அருளிச் செய்திருக்கிருர். இதனல், சிலர் கூறும் கருத்து பொருத்த முடைய தன்று என்பது மிகத் தெளிவு.

இவ்வாறு, போர்புரிய விருப்பம் கொண்டு, குருக்ஷேத்திரத்தில் கூடின இருவர் சேனைகளை யும் கண்ட துரியோதனன் மிகவும் துன்ப முற்றவனய் இருந்தான் என்னும் அத்துரியோ தனன் நிலையை, கீதையின் முன்னுரையில் கூறப் பெற்றுள்ளவாறு ஒருவிதமாய் ஆராய்ந்து அறிந்தோமல்லவா?

---

## நடைபெற்ற நிகழ்ச்சிகள் :

ஸ்ரீ முத்தாலம்மன் கோயில், ஆத்தூர், திண்டுக்கல் வட்டம் சித்திரை உற்சவம்
ஸ்ரீ சட்டைநாத சுவாமி கோயில், திருஅம்பர், நன்னிலம் தாலுக்கா — சைத்ரவிஷு புண்ணிய கால உற்சவம்.
ஸ்ரீ எம்பெருமானர் தேவஸ்தானம், ஆழ்வார்திருநகரி. — திரு நக்ஷத்திர உத்சவம்.
ஸ்ரீ திருப்பரிதிநியமம்(பரிதியப்பர் கோயில்)ஒரத்தநாடு தாலுக்கா—பங்குனி உத்திர பிரம்மோற்சவம்
ஸ்ரீ பாஷ்யகாரஸ்வாமி தேவஸ்தானம், பெத்துநாயக்கன் பேட்டை, சென்னை — சைத்ரோத்சவம்
ஸ்ரீ லக்ஷ்மீ நரசிம்மஸ்வாமி தேவஸ்தானம், சோளசிம்மபுரம் — பிரம்மோத்சவம்.
ஸ்ரீபவ ஔஷதீஸ்வரசுவாமி கோயில், திருத்துறைப்பூண்டி — சித்திரைப் பெருந் திருவிழா
ஸ்ரீ வீரராகவஸ்வாமி தேவஸ்தானம், திருவள்ளூர், செங்கை மாவட்டம்—சைத்ர பிரம்மோத்சவம்
ஸ்ரீ கௌமாரியம்மன் தேவஸ்தானம், வீரபாண்டி, மதுரை மாவட்டம்—சித்திரைப் பெருந்திருவிழா
ஸ்ரீ திருக்குற்றாலநாதசுவாமி கோயில், திருக்குற்றாலம் — சித்திரை விசுத் திருவிழா

# தொண்டைநாட்டுத் திருப்பதியநுபவம்

மகாவித்துவான். P. B. அண்ணங்கராசார்ய சுவாமிகள், காஞ்சிபுரம்.

( முன் இதழ்த் தொடர்ச்சி )

## திருப்பாடகமென்கிற ஸ்ரீ பாண்டவதூதர் ஸன்னிதியனுபவத்தில் பகவத் கீதையின் பொருள் விளக்கம்.

உலகிலுள்ள சேதநர்கள் சிலர் ஸாத்விகர்களாயும் பலர் ராஜஸர்களாயும், தாமஸர்களாயுமிருக்கக் காண்கிறோம்; வேதங்கள் எல்லார்க்கும் வழி காட்டியாக வேண்டும். பல சரக்குக் கடைகளில் சர்க்கரை வெல்லம் குங்குமப் பூ கடுகு மிளகு சீரகம் முதலிய எல்லாப் பொருள்களும் (நேர்வாளமுட்பட) விற்கப்படுவது போல, வேதங்கள் முமுக்ஷுக்களுக்கும் வழி காட்டுகின்றன; புபுக்ஷுக்களுக்கும் வழிகாட்டுகின்றன. பரஹிம்ஸைக் குரிய உபாயங்களையும் காட்டுகின்றன. ஆனால் வேதம் காட்டுகின்றவற்றையெல்லாம் நாம் கொள்ள வேணுமென்பது கிடையாது. கடையில் விற்கப்படுகின்ற விஷத்தையுமா நாம் வாங்கிக் கொள்ளுகிறோம். இல்லையே. அதுபோல ராஜஸர்களுக்கும் தாமஸர்களுக்கும் வேதம் காட்டுகிற வழிகளை நாம் பற்றலாகாது. [''நிஸ்த்ரைகுண்யோ பவ அர்ஜுந''] இதை நோக்கும் போது 'ஸத்வகுண முட்பட ஒரு குணத்தையும் நீ கைக் கொள்ளாதே' என்று கண்ண பிரானருளிச் செய்வதாகத் தோன்றும். ''முக்குணத்திரண்டவையகற்றி ஒன்றினிலொன்றி நின்று'' என்று திருமங்கை யாழ்வார் திருவெழு கூற்றிருக்கையிலருளிச் செய்த படியே, ரஜஸ் தமோ குணங்களை விட்டு ஸத்வகுண மொன்றிலேயே ஊன்றியிருக்கக் கடவாய்—என்றுராமாநுஜர் பாஷ்யமருளிச் செய்கிறார். இதற்கு மூலத்தில் ஆதாரமில்லை போல் தோன்றும். மேலே உத்தரார்த்தத்தில் 'நித்ய ஸத்வஸ்த:' என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருப்பதற்குச் சேரவே ஸ்வாமி உரைத்தருளினரென்று கொள்ள வேணும். ஆனாலும் 'நிஸ்த்ரைகுண்ய:' என்பதற்கு முக்குணங்களுமில்லாதவனென்று தானே பொருள்படும்; ஸ்த்வகுணப்ரசுரனென்று பொருள்பட வழியுமுண்டோ என்று கேள்வி தோன்றும். கேண்மின், (நிஸ்த்ரைகுண்ய:) என்பதற்கு மூன்று குணங்களும் பிசிறியிருக்கப் பெருதவன் என்பதே எழுத்தின் மீது தேறும் பொருள். வேதங்களில் ராஜஸ தாமஸர்களுக்குக் காட்டியுள்ள உபாயங்களில் கண் வையாதே ஸாத்விகர்களுக்குக் காட்டியுள்ள உபாயங்களில் மட்டுமே நீ கண்வைக்கக்கடவாய் என்றதாகத் தேறிற்று.

(3) யாவரும் தினப்படியாக தேவதாராதனம் செய்து நிவேதனம் செய்து தச்சேஷத்தைக் கொண்டே தேஹதாரணம் பண்ண வேணு மென்பது சகல சாஸ்த்ரங்களின் கொள்கை. இவ்வர்த்தம் மூன்றுமத்யாயத்தில் பல ச்லோகங்களில் தெரிவிக்கப் படுகின்றது. 10, 11, 12 ச்லோகங்கள் இவற்றுள் மிகமுக்கியமானவை. பகவான் யஜ்ஞங்களோடு கூடவே ப்ரஜைகளைப் படைத்து இந்த யஜ்ஞத்தைக் கொண்டே நீங்கள் அபிவிருத்தி யடையக் கடவீர்கள்; இந்த யஜ்ஞமானது உங்களுக்குப் பரம புருஷார்த்தமான மோக்ஷமென்கிற புருஷார்த்தத்தையும் அதற்குச் சார்பான மற்ற இஷ்டங்களையும் பூர்த்தி செய்யக்கடவது— என்று கூறினர். ''யஜ—தேவ பூஜாயாம்'' என்று தாது வாகையாலே பகவதாராதனந்

தான் யஜ்ஞமெனப்படுகிறது. பகவதாராதனம் செய்தே அவரவர்கள் அபிவிருத்தியடைய முடியுமென்றும், பகவதாராதனத்தினல்தான் அபீஷ்ட காமங்கள் நிறை வேறுமென்றும் சொல்லிற்ருயிற்று. இது தன்னை 11 வது ச்லோகம் விவரிக்கிறது. ("தேவாந் பாவயதாநேந தே தேவா பாவயந்து வ: பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய பரம் அவாப்ஸ்யத"). பகவதாராதனமான இந்த யஜ்ஞத்தினலே எனக்கு சரீர பூதர்களான தேவர்களை ஆராதியுங்கள்; அப்படி ஆராதிக்கப்பட்ட அந்த தேவர்கள் மேன் மேலும் தங்களுடைய ஆராதனைக்கு வேண்டிய பொருள்களினல் உங்களைப் போஷிக்கக் கடவர்கள்; இப்படி பரஸ்பரம் த்ருப்தி பெறுவித்துக் கொண்டு சிறந்த ச்ரேயஸ்ஸான மோக்ஷத்தை அடைவீர்கள்—என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. மேலே ஒன்பதாமத்யாயத்திலே (22) "அநந்யாச் சிந்தயந்தோ மாம்யே ஜநா - பர்யுபாஸதே" என்கிற ச்லோகத்தினல் தன்னையே உபாஸிக்கும் படி சொல்லி, அதற்கடுத்த (23) ச்லோகத்தில் "யேத்வந்யதேவதா பக்தா யஜந்தேச்ரத்த யாந்விதா: தேபிமாமேவ கௌந்தேய யஜந்த்யவிதி பூர்வகம்" என்று இதரதேவதைகளை பஜிப்பவர்களும் ஒருவாறு தன்னையே பஜித்து ஆராதனை செய்கிருர்களென்று சொல்லி, அதற்கடுத்த 24 ச்லோகத்தில்—"அஹம் ஹி ஸர்வ யஜ்ஞா நாம் போக்தாச ப்ரபுவேச"என்று எந்த தேவதையை நோக்கி, எந்த ஆராதனம் செய்தாலும், அதெல்லாம் தன்னையே சேருகிறதென்றும் அதற்குப் பலனும் தானே கொடுப்பதாகவும் சொல்லியிருப்பதால், இவ்விடத்தில் "தேவதைகளை ஆராதி, யுங்கள்" என்றும் "அந்த தேவதைகள் உங்களுக்குப் பலனளிக்கும்" என்றும் படர்க்கையாகச் சொல்லியிருந்தாலும் குறையொன்றுமில்லையென்று கொள்க.

இனி ப்ரக்ருத விஷயத்திற் செல்வோம். 3-12 "இஷ்டாந் போகாந் ஹி வோ தேவா தாஸ்யந்தே யஜ்ஞபாவிதா: தைர்தத்தாந் அப்ரதாயைப்யோ யோ புங்க்தே ஸ்தேந ஏவ ஸ: * இந்த ஸ்லோகத்தின் கருத்தாவது—உங்களுடைய யஜ்ஞங்களாலே ஆராதிக்கப்பட்டவர்களும் என்னுடைய சரீர பூதர்களுமான தேவர்கள் உங்களுக்கு அபேக்ஷிதங்களான போகங்களைக் கொடுப்பார்கள். ஆராத நோபகரணங்களாக உங்களிடமுள்ள பொருள்களெல்லாம் அந்தத்தேவர்களாலேயே கொடுக்கப்பட்டவைகளாதலால் அவற்றை அவர்களுக்கு அர்ப்பணம் செய்யாமல் புஜிப்பவன் கள்வனேயாவன், நரகமே யவனுக்குப் பலிக்கும்—என்றபடி. இதில் (தைர்தத்தாந்) என்றது குறிக்கொள்ளத்தக்கது. தைத்திரீயஸம் ஹிதையில் மூன்ருவது காண்டத்தில் இரண்டாவது ப்ரச்நத்தில்"இத: ப்ரதாநம் தேவா உபஜீவந்தி; அமுத: ப்ரதாநம் மநுஷ்யா:" என்று ஓதப்பட்டுள்ளது. இதன் கருத்தாவது, தேவதைகளுக்கு ஆகவேண்டிய உணவு இங்கிருந்து செல்லுகிறது; மனிதர்களான நமக்கு ஆகவேண்டிய உணவு அங்கிருந்து வருகிறது என்பதாம். * முந்திவானம் மழை பொழிய மூவா உருவின் மறையாளர், அந்திமூன்று மனலோம்பு மணியார் வீதி—யழுந்தூரே * என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே இங்கிருக்கும் நாம் யஜ்ஞயாகங்களைச் செய்து தேவர்களை த்ருப்திபண்ணி வைத்தால் திருப்தர்களான அவர்கள் அங்கிருந்து மழையை யனுப்பி நம்மை ஜீவிக்கச் செய்கிருர்களென்கை. ஆகவே நாம் தேவதாராதனம் பண்ணுமல் வெறுமனே வயிற்றை வளர்த்தால் ஜீவிப்பதும் அரிதாம் என்றதாயிற்று. பல பேர்கள் தேவதைகளின் உண்மையையே அங்கீகரியாதவர்களாயும் அவர்களுக்கு ஆராதனம் செய்யாதவர்களாயும் உண்டுடுத்துத் திரியவில்லையா? அவர்கள் சுகமாக ஜீவிக்கவில்லையா? என்கிற ஆக்ஷேபத்தை இங்குச் சிலர் செய்யக்கூடும். அவர்கள் "அதர்மேண ஏததே தாவத் ததோ பத்ராணி பச்யதி சநை ராவர்த்தமாந ஸ்து கர்த்துர் மூலாநி க்ருந்ததி" என்கிற மநுமஹர்ஷி வசனத்தை நோக்கித் தெளியக் கடவர்கள். அதர்மம் செய்பவர்கள் மேன்மேலும் க்ஷேமங்களை யடைவதாக உலகில் நாம் காண நேர்ந்தாலும், அதர்மம் உடனே ஹாநியை விளைத்திடாமல் நாளடைவில் மூல ஹாநியை விளைத்திடுமென்று கொள்ளவேணும். இதை மநு மஹர்ஷி பல ச்லோகங்களால் விரிவாகச் சொல்லியிருக்கிருர்.

இனி (3-21) * யத்யதாசிரதி சிரேஷ்டஸ் தத் ததே வேதரோஜந: ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ் ததநு வர்த்ததே. * என்னும் ச்லோகம் சிஷ்டாசாரத்தின் சிறப்பைத் தெரிவிப்பது. ஸம்ஸ்க்ருத பாஷையுணர்ந்தவர்

களுக்கு அநாயாஸமாகப் பொருள் படக்கூடிய ச்லோகமிது. இதன் உத்தரார்த்தத்திற்கு பாஷியமிட்ட சங்கராசார்ய ஸ்வாமிகள் காட்டியிருக்கும் பொருளாவது, ச்ரேஷ்டராயிருப்பார் யாதொன்றை ப்ரமாணமாகக் கொள்ளுகிருர்களோ, அது தன்னேயே லோகமும் ப்ரமாணமாகக் கொள்ளுகிறது என்பதாக.

மத்வாசார்யரான ஆனந்ததீர்த்த ஸ்வாமிகளும் இவ்வண்ணமாகவே பொருளுரைத்தார். ஆக இவற்ருல் "யத்ப்ரமாணம்" என்ற விடத்தில் பதச்சேதம் இவர்களுக்கு விவக்ஷிதம் என்று தேறிற்று. யத் என்பது தனிப்பதமென்று முடிந்தது. இனி ஸ்ரீ ராமாநுஜருடைய பாஷ்ய ப்ரக்ரியையைப் பார்ப்போம். அவர் இங்கு இரண்டு பதங்களாகத் திருவுள்ளம் பற்ருமல் (யத்ப்ரமாணம்) என்று பஹுவ்ரீஹி ஸமாஸங்கொண்ட ஒரே பதமாகத் திருவுள்ளம் பற்றி பாஷ்யமிட்டருளியுள்ளார். பூர்வார்த்தத்தில் "ச்ரேஷ்ட: யத்யத் ஆசரதி" என்றதற்கு—ச்ரேஷ்டராயிருப்பார் எந்தெந்த கருமத்தையநுஷ்டிக்கிருரோ என்பதாகப் பொருளாதலால் அந்த கர்மத்தைப் பற்றியே உத்தரார்த்தமும் சொல்லுகிறதென்று ஸ்வாமியின் திருவுள்ளம். சிஷ்டர்கள் தாங்களனுஷ்டிக்கிற கருமத்திற்கு எவ்வளவு அவதி வைத்துக் கொள்ளுகிருர்களோ அவ்வளவு அவதியையே பிறரும் வைத்துக் கொள்ளுகிருர்கள் என்றபடி. இதை தாத்பர்யசந்த்ரிகையில் வேதாந்த தேசிகர் விவரித்துள்ளார். 'பெரியோர்கள் அனுட்டிக்கிற கருமத்தையே பிறரும் அநுட்டிக்கிருர்கள்' என்று இவ்வளவு மாத்திரமே சொன்னுல் போதாது. அவர்கள் அக்கருமத்தை எந்த விதமாக அநுட்டிக்கிருர்களோ அந்த விதமாகவே பிறரும் அநுட்டிக்கிருர்கள் என்றும் சொல்லவேண்டியது இங்கு ஆவச்யமாதலால் அதற்குச் சேர ஸ்ரீ ராமாநுஜருடைய பாடியம், மிகப் பொருத்தமாக அவதரித்துள்ளது. பெரியார் எதை ப்ரமாணமாகக் கொள்ளுகிருரோ அதையே பிறரும் ப்ரமாணமாகக் கொள்ளுகிருரென்பது ப்ரக்ருதத்தில் அநபேக்ஷிதமாதலால் இதர பாடியகாரர்களே இராமாநுஜர் பின் செல்லவில்லே. 'யத்ப்ரமாணம் குருதே' என்றதற்கு இங்ஙனே பொருள் கொண்டால் "லோகஸ் ததநுவர்த்ததே" என்ற மேல் வாக்யத்தில் தத் என்றது ஸ்வரஸமாகப் பொருள் தருமோவென்று ஒரு சங்கை தோன்றும். இதற்குத் தாத்பர்ய சந்த்ரிகையிலேயே தகுந்த பரிஹாரமுள்ளது, கண்டு கொள்க. இதர பாடியகாரர்களுக்குத் தோன்ருத அர்த்தம் இங்கு ராமாநுஜர்க்குத் தோன்றினது எதனுலென்னில்; திருப்பாவை ஜீயரென்று ப்ரஸித்தி பெற்றிருந்ததனுலேயே என்னலாம். திருப்பாவையில் * மாலே மணிவண்ணு * என்கிற பாசுரத்தில் "மேலையார் செய்வனகள் கேட்டியேல்" என்னுமளவே போதுமாயிருக்க இடையில் 'வேண்டுவன' என்று ப்ரயோகித்தது குறிக்கொள்ளத்தக்கது.

இதற்கடுத்த ச்லோகம் (3-22) * ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந, நாநவாப்தம் வாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி * என்பது. இதில் பகவான் தானும் கர்மாநுஷ்டானத்தில் ஊன்றியிருப்பதாக வற்புறுத்திச் சொல்லப்பட்டுள்ளது. க்ருட்ணுவதாரத்திற்கு முந்தின அவதாரமான ஸ்ரீ ராமாவதாரத்தில் இதுதன்னே ஸுஸ்பஷ்டமாகக் காணலாம். விச்வாமித்ர முனிவன் தசரத மன்னவனிடம் வந்து * அஹம் வேத்மி மஹாத்மாநம் * இத்யாதிகளைச் சொல்லி ஸ்ரீ ராமபிரானேக்கொண்டு சென்ருன். * ஊநஷோடசவர்ஷோ மே ராமோ ராஜீவலோசந: * என்று சக்ரவர்த்தி சொன்னபடி இராமன் செந்தாமரைக் கண்ணனுகையாலே ஸூர்யன் அஸ்தமித்தவாறே தாமரை முகுளிதமாகுங் கணக்கிலே இராமனும் கண் மூடினுன். பிறகு சுப்ரபாத காலத்திலே முனிவன் "கௌஸல்யா சுப்ரஜா ராம! பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே" என்று சொல்லித் துயிலுணர்த்துகிருன். "இராமா! எழுந்திரு; நாம் சீக்கிரமாக ஆச்ரமம் சென்று சேர்ந்து யாகம் தொடங்கவேணும் என்று சொல்லவேண்டியிருக்க, அங்ஙனே சொல்லாதே "உத்திஷ்ட நரசார்தூல! கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்" என்ருன் முனிவன். ப்ராதஸ் ஸந்த்யா நுட்டானம் வழுவாமற் செய்ய வேண்டுமே, அதற்காக எழுந்திராய் என்று சொன்னவிதனுல் எம்பெருமானுடைய அவதாரம் முக்கியமாக தர்மாநுட்டானத்திற்காகவே யென்பது நன்கு விளங்கும். மேலே பிராட்டியைப் பிரிந்து வருந்திக் கிடக்கிற காலங்களிலும் பெருமாள் ஸந்தியாகாலங்களில் தவருது ஸந்தியா வந்தனம் அனுட்டித்தபடியை வான்மீகி பகவான் கூறியிருக்கின்ருர். ஆகவே பகவான் "வர்த்த ஏவ சகர்மணி" என்று சொன்னது மிகப் பொருந்தும்.

இனி நான்காமத்யாயத்தைப் பற்றிச்சிறிது விரிவாக வுரைக்க விரும்புகிறேம். கீதையில் 'அர்ஜுன உவாச, பகவானுவாச' என்னுமிவை மாறி மாறி வருவதைக் காணலாம். அர்ஜுநன் கேள்வி கேட்பன்; அதற்குக் கண்ணபிரான் விடை கூறுவன். வினவுக்குப் பிறகு விடை, விடைக்குப் பிறகு வினு—என்றிப்படி மாறிமாறி நடந்து செல்லும். மூன்றுமத்யாயத் தொடக்கத்தில் 1, 2 ச்லோகங்கள் அர்ஜுநனுடைய வினு. அதன் பிறகு 3 முதல் 35 ச்லோகம் வரை பகவானுடைய விடை. அதன் பிறகு முப்பத்தாறுவது ச்லோகமொன்று அர்ஜுநனுடைய வினு. பிறகு 37 முதல் 43 வரை அத்யாயம் பூர்த்தியாக பகவானுடைய விடை. அவ்வளவோடு அத்யாயம் முடிந்திருக்கிறது. இனி, மேல் விஷயம் நடைபெறவேணுமானுல் நான்காமத்யாயத்தின் தொடக்கத்தில் (அர்ஜுந உவாச) என்று அர்ஜுநனுடைய வினு ஆரம்பமாகவேணும். கீழே பகவானுடைய விடை முடிந்திருப்பதால் அதற்கு மேல் அர்ஜுனன் வினவினுல் பகவான் விடை கூற வேணும். அர்ஜுநனே ஒன்றும் கேட்டிலன். அப்படியிருந்தும் நான்காமத்யாயம் (ஸ்ரீ பகவானுவாச) என்றே தொடங்குகிறது. இதை ஆழ்ந்து விமர்சிக்குமளவில் ஒன்று தோன்றுகிறது. கீழே கர்மயோகத்தைப் பற்றி விரிவாகச் சொல்லக் கேட்ட அர்ஜுநனுக்குத் தலை வேதனையுண்டாயிற்றுப் போலும். அதனுல் கீதை கேட்டது போதுமென்றெண்ணித் தலை குனிந்து வாளாவிருந்தான்; 'நாம் ஏதாவது கேட்டால் தானே கண்ணன் வாய்திறக்கப் போகிருன், நாம் வாய் மூடிக் கிடந்தோமாகில் தானே நிற்கிருன்; கீதையும் முற்றுப் பெறுகிறது' என்று நினைத்தான் போலுமர்ஜுநன். இன்னு மெவ்வளவோ அர்த்த விசேஷங்களைச் சொரிய நினைத்திருக்கிற கண்ணபிரான் எங்ஙனம் வாய் மூடி நிற்பன்? இவ்வளவோடு கீதையை எப்படி முடித்திடுவன்?

(தொடரும்)

## நடைபெற்ற நிகழ்ச்சிகள் :

ஸ்ரீ முத்துமாரியம்மன் தேவஸ்தானம், கரம்பயம், பட்டுக்கோட்டை வட்டம்-சித்திரை மகோத்சவம்
ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் கோயில், சென்னை சிந்தாதிரிப்பேட்டை—சித்திரை பிரம்மோற்சவம்
ஸ்ரீ தர்மராஜா தேவஸ்தானம், பண்ணப்பட்டி — ஸ்ரீ திரெளபதியம்மன் திருவிழா
ஸ்ரீ வேங்கடாஜலபதி ஸ்வாமி தேவஸ்தானம், ஒப்பிலியப்பன் சந்நிதி, திருநாகேஸ்வரம்—பங்குனி பிரம்மோத்சவம்.
ஸ்ரீ சுப்ரமணியசுவாமி கோயில், மருதூர், லால்குடி வட்டம்—பங்குனி உத்திரம்
ஸ்ரீ மாரியம்மன் தேவஸ்தானம், உதகை — திருத்தேர் விழா
ஸ்ரீ பிரகதீஸ்வர சுவாமி ஆலயம், கங்கைகொண்ட சோழபுரம்—சனிபெயர்ச்சி உத்சவம்
ஸ்ரீ மாரியம்மன் திருக்கோயில், இளம்பிள்ளை — பங்குனித் திருவிழா
ஸ்ரீ செல்வமாகாளியம்மன், ஸ்ரீ பால்குளத்தி அம்மன், உடையாளூர், தஞ்சை—மகோத்சவம்
ஸ்ரீ கோதண்டராமசுவாமி கோயில், மதுராந்தகம்—ஸ்ரீ ராமநவமி திருவிழா
ஸ்ரீ ஆமருவியப்பன் கோயில், தேரழுந்தூர், தஞ்சை மாவட்டம்—ஸ்ரீ கம்பர் விழா
ஸ்ரீ மாரியம்மன் கோயில் தேவஸ்தானம், புதுப்பாளையம், இராஜபாளையம் — சித்திரைத் திருவிழா
ஸ்ரீ பார்த்தசாரதிஸ்வாமி தேவஸ்தானம், திருவல்லிக்கேணி — திருஊறல் உத்சவம்
ஸ்ரீ பாபவிநாச சுவாமி தேவஸ்தானம், பாபவிநாசம்—சித்திரை விசு உத்சவம்
ஸ்ரீ காசிவிசுவநாதர் மரகதம்பாள் கோயில், அம்பை — பங்குனித் திருவிழா
ஸ்ரீ முத்துமாரியம்மன் கோயில், தாயமங்கலம், இராமநாதபுரம் மாவட்டம்—பங்குனித் திருவிழா
ஸ்ரீ பூவணநாதசுவாமி தேவஸ்தானம், கோயில்பட்டி—பங்குனி பிரம்மோத்சவம்
ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி தேவஸ்தானம், திருபுவனம் — உருத்திரபாதத் திருநாள்
ஸ்ரீ பவானியம்மன் சமேத ஸ்ரீ சுயம்புநாதசுவாமி கோயில், பேரளம் — பங்குனி உத்திரம்
ஸ்ரீ கொளஞ்சியப்பர் தேவஸ்தானம், மணவாள நல்லூர் — பங்குனி உத்திரப் பெருவிழா
ஸ்ரீ காமாட்சியம்மன் கோயில், கடலூர் —பிரம்மோத்சவம்
ஸ்ரீ பிருஹந்நாயகீ சமேத ஸ்ரீ கனககிரீஸ்வரசுவாமி தேவஸ்தானம், தேவிகாபுரம் — பங்குனி உத்திர மகோத்சவம்

# திருவுத்தரகோசமங்கை

**முன்னுரை :**

திருவுத்தரகோச மங்கை என்னும் சிறந்த தலம், இராமநாதபுரத்தில் இருந்து தென் மேற்கில் 10 கல் தொலைவில் உள்ளது. இதற்கென ஒரு சிறு புகை வண்டி நிலையம் உண்டு. அதில் இருந்து நேர் தெற்கே நான்கு கல் தொலைவில் திருவுத்தர கோச மங்கைக் கோயில் சிறப்புற விளங்குகின்றது. திருப்புல்லணை திரு இராமேசுவரம் திருச்சுழியல் திருவால வாய் திருமருதூர் திருப்புனவாயில் முதலிய தலங்கள் நாற்றிசைகளிலும் சூழ அவற்றிற்கு நடுவே அழகுற அமைந்து திருவுத்தர கோச மங்கை திகழ்கின்றது.

**பண்டைத்தலம் :**

பாண்டிய நாட்டில் உள்ள தலங்களில் இது மிகவும் பழமையும் பெருமையும் வாய்ந்த தலம் ஆகும். இப் பண்டைத் தலத்திற்குத் தேவாரப் பாடல்கள் இல்லையாயினும், **மாணிக்கவாசகர்** தம் முடைய திருவாசகத்தில் இதனைப் பெரிதும் சிறப்பித்துப் பாடி யிருக்கின்றார்.

**திருத்தசாங்கம்:**

திருவாசகத்தில் **திருத்தசாங்கம்** என்னும் பகுதியில், சிவபிரான் ஆகிய பேரரசனுக்குரிய நாடு மலை ஆறு ஊர் முதலிய பத்துவகைச் சிறப்புறுப்புக்களையும் குறிப்பிடும் இடத்தில், ஊர் என்னும் உறுப்பாக வைத்துத் திருவுத்தரகோச மங்கைத் தலமே சிறந்தெடுத்துப் பேசப் பெற்றிருக்கின்றது. "தாதாடு பூஞ் சோலைத் தத்தாய் நமையாளும், மாதாடு பாகத்தன் வாழ்பதி, என் கோதாட்டிப், **பத்தர் எலாம் பார்மேற் சிவபுரம் போற் கொண்டாடும் உத்தரகோச மங்கை ஊர்"** என்பது திருவாசகம் — திருத்தசாங்கச் செய்யுள்!

இத் திருப்பாடலால் ஏறத்தாழ 1600 ஆண்டுகட்கு முற்பட்ட மாணிக்கவாசகர் காலத்திலேயே இந்தச் சிறந்த தலமானது, 'இந்நிலவுலகில் விளங்கும் **திருக்கயிலாயம்** (சிவபுரம்)' எனப் பத்தர்கள் எல்லாரும் புகழ்ந்து கொண்டாடும்படி ஒப்புயர்வற்ற பெருமையினைப் பெற்றிருந்தது எனத் தெரிகின்றது.

**மகேந்திரம்:**

சிவபிரான் வலைவீசிய திருவிளையாடல் நிகழ்த்தியதும், வலைஞர்கள்பால் மகளாய் வந்து வளர்ந்த அம்பிகையை மணம் புரிந்து கொண்டருளியதும், கடலிற் சுறுமீனின் வாயினின்று மீட்ட ஆகம நூல்களை உலகுக்கு வெளிப்படுத்தியருளியதும், இத் தலமே யாகும். "கேவேடர் ஆகிக் கெளிறது படுத்து மாவேட்டாகிய **ஆகமம்** வாங்கியும்; மற்றவை தம்மை மகேந்திரத்து இருந்து உற்ற ஐம்முகங்களாற் பணித்தருளியும்" எனத் திருவாசகம் கீர்த்தித் திருவகவல் வரிகள், இச் செய்திகளை உணர்த்துதல் காணலாம். மகேந்திரம் என்பது, திருவுத்தர கோசமங்கையின் ஒரு பெயராகச் சிலர் கூறுவர்.

பெயர்க் காரணம்:

இத்தலத்திற்குத் திருவுத்தரகோசமங்கை எனப் பெயர் அமைந்ததற்குரிய காரணம் பின்வருமாறு: உத்தரம்-உபதேசம். கோசம் - இரகசியம், மறை பொருள். மங்கை - உமாதேவியார். முன்பு ஒரு காலத்தில் சிவபெருமான், உமாதேவியாருக்கு வேதாகமங்களின் மறை பொருள்களை இத் தலத்தில் உபதேசித்த காரணம் பற்றி, இதற்கு உத்தரகோச மங்கை எனப் பெயர் ஏற்பட்டது.

"சிவபரஞ்சோதி ஓர் அமயத்திற் சுரிகுழல் மாதர் நோக்கின் மலைமகள் கேட்பவே, இரகசியத் துரைத்தமை யால், அப்பெயர் விண்ணவர் முதலோர் இசைத்தது என்ப; பிரதி எனல் உத்தரம் ஆம்; இரகசியம் கோசம் எனப் பேசல் ஆகும்; தரை வலயத்து அன்னதனல் உத்தரகோசப் பெயரும் தழைப்ப நீடும்" என்பது திருவுத்தரகோச மங்கைத் தலபுராணச் செய்யுள் (5: 17-18).

மற்றொரு விளக்கம்:

இனி, இவ்வாறு அன்றி மற்றொரு வகையாகவும் அறிஞர்கள் இப் பெயர்க் காரணத்தை விளக்குவர். உ-உயர்ந்த. தரம்-தகுதிப்பாடு. கோசம்-நூல். மங்கை-மங்கலம். மங்கலம் என்பது ஊர்ப்பெயர்களில் வரும் ஒருவகைச் சொல் விழுக்காடு. வரகுணமங்கலம் வரகுணமங்கை எனவும்,சீவர மங்கலம் சீவர மங்கை எனவும் வருதல் போல, உத்தரகோசமங்கலம் என்பதே உத்தரகோச மங்கை என்று மருவியது எனவும் அறிஞர்கள் கூறுவர். "உயர்ந்த தகுதிப்பாடு மிக்க ஆகம நூல்களை இறைவன் வெளிப் படுத்திய மங்கலம் அமைந்த தலம்" என்பது, இதன் திரண்ட கருத்து.

தலப்பெயர்:

இத்தலத்திற்கு மங்களபுரி, பிரமபுரம், சாத்துவிகத்தானம், வெதிரிகாரணியம் (இலந்தைக்காடு), பார்வதிபுரம், சித்தக்ஷேத்திரம், (சிந்திப்பவை யாவும் சித்திக்கச் செய்யும் தலம்), தக்ஷணகாசி, சதுர்வேதபுரி, கல்யாணபுரி (இறைவன் அம்பிகையை மணம் புரிந்து கொண்ட தலம்), எனப் பல பெயர்கள் உண்டு. இப் பெயர்களினாலேயே இத் தலத்தின் பெருமைகளை யுணரலாம்.

தீர்த்தங்கள்:

இங்கே அக்கினி தீர்த்தம், பிரமதீர்த்தம், இந்திர தீர்த்தம், சார்வதி தீர்த்தம், கௌமார தீர்த்தம், பதும தீர்த்தம், சீதள தீர்த்தம், தேவி தீர்த்தம், அரித்துவச கூபதீர்த்தம் எனப் பல சிறந்த தீர்த்தங்கள் அமைந்து இருக்கின்றன.

இறைவன் பெயர்கள்:

இத் தலத்தில் எழுந்தருளி விளங்கும் சிவபெருமானுக்கு மங்களநாதர், பிரளயாகேசுரர் (பிரளய காலத்திலும் அழியாதவர்), துரிதாபகர் (துரிசுகள் யாவும் போக்குபவர்) முதலிய பல பெயர்கள் வழங்கும். "உத்தர கோச மங்கையுள் இருந்து வித்தக வேடம் காட்டிய இயல்பு" பற்றிக் காட்சி கொடுத்த நாயகர் என்றும், அம்பிகையை இங்கு மணந்து கொண்டதனாற் 'கல்யாண சுந்தரர்' என்றும் பெயர்கள் வழங்கும்.

இறைவி பெயர்கள்:

இத் தலத்தில் அம்பிகைக்கு மங்களேசுவரி, மங்கள தாயிநி (மங்களத்தைத் தருபவள்), புட்பதநி (மலர்களால் பூசிக்கப் பெறுபவள்), சுந்தர நாயகி, கல்யாண சுந்தரி எனப் பல பெயர்கள் உண்டு. அம்பிகை இங்கே இறைவனின் சாபத்தினால் வலைஞர்களிடையே வந்து வளர்ந்து, பின்னர் இறைவனால் மணந்து கொள்ளப் பெற்றதனால், "திரைசேர்மடந்தை" எனவும் ஒரு பெயர் வழங்கப் பெறுவள். இது "திரை

சேர் மடந்தை மணந்த திருப் பொற் பதப்புயங்கா! வரை சேர்ந் தடர்ந்தென்ன வல்வினை தான் வந்து அடர்வனவே'' எனவரும் திருவாசகச் செய்யுட் பகுதியாலும் தெளியப் படும்.

**நீத்தல் விண்ணப்பம், திருப்பொன்னூசல்:**

இத்தலத்தில் பிரமன், வேதமித்திரன், கந்தருவ கன்னியர், அரித்துவசன், நளன், அம்பிகை முதலியோர் சிவபிரானை வழி பட்டுப் பேறு பெற்றனர் எனத் தல புராணம் கூறுகின்றது. எனினும் மாணிக்கவாசகப் பெருமான் இங்கே சிலகாலம் தங்கியிருந்து, இறைவனை வழி பட்டு, திருவாசகத்தில் நீத்தல் விண்ணப்பம், திருப்பொன்னூசல் என்னும் இரண்டு திருப்பதிகங்களை அருளிச் செய்தனர் என்பதே, இன்று இத்தலம் பெரிதும் சிறப்புடையதாக மதித்துப் போற்றப் படுவதற்குரிய காரணம் ஆகும்.

**மரகத நடராசர்:**

இங்கே எழுந்தருளி விளங்கும் நடராசப்பெருமானின் திருவுருவம், மரகதம் என்னும் விலையுயர்ந்த பச்சை நிறப் பளிங்கினால் அமைந்து ஒளிரும் சிறப்பு மிக்கது. தில்லைப் பொன் னம்பலத்தில் ஆடல் புரியும் முன்னரே, நடராசப் பெருமான் இங்குத் திருநடனம் புரிந்தான் என்பது தலபுராணம். ஆதலின் இத் தலத்திற்கு ஆதிசிதம்பரம் என்றும், இறைவனுக்கு ஆதிசிதம்பரேசுரர் என்றும் பெயர்.

**அருணகிரிநாதர்:**

ஏறத்தாழ 500 ஆண்டுகளுக்கு முன்பு விளங்கி யிருந்த ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள், இத்தலத்திற்குச் சென்று வழி பட்டு மகிழ்ந்து, இரண்டு திருப்புகழ்ப் பாடல்களை அருளிச் செய்திருக்கின்றார். ''உத்தம மா வளங்கொள் உத்தர கோச மங்கை'' என அவர், இத்தலத்தினை வியந்து புகழ்ந்து போற்றியுள்ளார்.

**முடிவுரை:**

இத் தகைய சிறப்புமிக்க திருவுத்தர கோசமங்கை என்னும் சிறந்த பழம் பெருந் தலத்திற்கு நாமும் சென்று, இறைவனை வழிபட்டு, இன்னருள் பெற முயலுவோமாக!

—ஆசிரியர்.



சென்னை ஸ்ரீ சென்னமல்லீஸ்வரர் கோவிலில் நடைபெற்ற திருநடன உற்சவக்காட்சி (8-4-64)

# திரு ஆமாத்தூர்க் கல்வெட்டுகள்

திரு. டாக்டர் மா. இராசமாணிக்கனூர், M.A., M.O.L., Ph.D.

## கோவில்

இது பாடல் பெற்ற நடுநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. இவ்வூர் விழுப்புரம் புகைவண்டி நிலயத்திற்கு வடமேற்கு நான்கு கல் தொலைவில் இருக்கிறது; பம்பை என்னும் சிறிய ஆற்றின் வடகரையில் உள்ளது. கோவிலில் வன்னி மரமும் கொன்றை மரமும் இருக்கின்றன. அம்மன் கோவிலுக்குப் பெரிய கோபுரம் இருக்கின்றது. இவ்வூருக்குத் தலபுராணம் அச்சிடப்பட்டிருக்கிறது. இவ்வூரின் ஒரு புறத்தில் புலவர் புராணம் பாடிய தண்டபாணி சுவாமிகள் சமாதி இருக்கிறது. இவ்வூர்க் கோவிலின் மீது திருநாவுக்கரசர் இரண்டு பதிகங்களையும், திருஞானசம்பந்தர் இரண்டு பதிகங்களையும், சுந்தரர் ஒரு பதிகத்தையும் பாடியுள்ளார். இதனுல் இக்கோவில் திருநாவுக்கரசர்—திருஞான சம்பந்தர் காலத்திற்கு (கி. பி. 7ஆம் நூற்றுண்டிற்கு) முன்பே இருந்தது என்பது தெளிவாகும்.

## கல்வெட்டுக்கள்

இக் கோவிலில் எழுபதுக்கு மேற்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன. முதல் இராசராச சோழன் காலம் முதல் (கி. பி. 985—1012) சீரங்க தேவ மகாராயர் (கி. பி. 1584) காலம் வரையில் பேரரசர்—சிற்றரசர் காலத்துக் கல்வெட்டுக்கள் இக்கோவிலில் இடம் பெற்றுள்ளன. எனவே, இக்கோவில், அப்பர்—சம்பந்தர் காலமான கி. பி. 7-ஆம் நூற்றுண்டு முதல் கி. பி. 16-ஆம் நூற்றுண்டு முடிய உயர்ந்த நிலையில் இருந்தது என்று கூறுதல் பொருத்தமாகும்.

* இது 1922-ஆம் கல்வெட்டு ஆண்டு அறிக்கையின் துணையைக் கொண்டு எழுதப்பட்டது.

இக்கோவில் கல்வெட்டுக்களிலிருந்து தமிழகத்தை ஆண்ட அரசர்களையும் அவர்தம் போர்ச் செயல்களையும் அறியலாம். கோவிலாட்சி, நிலதானம், பிறதானங்கள், மடங்கள், விளக்குத்தானம், அரசாங்க அலுவலர் பெயர்கள், மக்கட் பெயர்கள், அக்காலத்து நாட்டுப் பிரிவுகள், பூசை—விழாக்கள், சுவாமி—அம்மன் பெயர்கள், சமுதாய நிலைமை என்பன போன்ற பல செய்திகளை அறியலாம்.

அவற்றைக் கீழே காண்க:

## அரசர்கள்

| | |
|---|---|
| இராசராசன் I | கி. பி. 985—1012 |
| இராசேந்திரன் I | கி. பி. 1012—1044 |
| இராசாதிராசன் I | கி. பி. 1018—1054 |
| வீர இராசேந்திரன் | கி. பி. 1063—1070 |
| குலோத்துங்கன் I | கி. பி. 1070—1122 |
| விக்கிரம சோழன் | கி. பி. 1118—1135 |
| இராசராசன் II | கி. பி. 1146—1173 |
| இராசாதிராசன் II | கி. பி. 1163—1179 |
| கோப்பெருஞ்சிங்கன் | கி. பி. 1216—1250 |
| சடையவர்மன் விக்கிரம பாண்டியன் | கி. பி. 1249—1258 |
| திரிபுவன சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் விக்கிரம பாண்டியன் | கி. பி. 1263—1276 |
| மாறவர்மன் வீரபாண்டியன் (சடையவர்மன் சுந்தர பாண்டியன் காலம்) | கி. பி. 1268—1281 |
| கோனேரின்மை கொண்டான் பராக்கிரம பாண்டியன் | கி. பி. 1315—1357 |
| இராச நாராயண சம்புவ ராயன் | கி. பி. 1337 |
| கம்பண உடையார் II (புக்க ராயர் மகன்) | கி. பி. 1372 |
| வீரப் பிரதாப தேவராயர் | கி. பி. 1445 |

# திருவுத்தரகோசமங்கை



உற்சவ நடராஜர்



கூத்தப் பெருமான்
(ஆண்டுக்கு ஒருமுறை திருவாதிரை
விழாக்காட்சியன்று மட்டும் புறப்பாடு)

| | |
|---|---|
| நரசிங்க உடையார் | கி. பி. 1471 |
| கிருஷ்ண தேவராயர் | கி. பி. 1513 |
| அச்சுதராயர் | கி. பி. 1532 |
| சதாசிவராயர் | கி. பி. 1556 |
| சீரங்க தேவ மகாராயர் | கி. பி. 1584 |

## கோவிலாட்சி

சோழர் காலத்தில் கோவிலாட்சியை உள்ளூர்ப் பெருமக்கள் குழுவினர் கவனித்து வந்தனர். வருமானம் மிகுதியாக வரும் கோவில்களில் கோவில் பண்டாரம் இருந்தது. அதனைக் கவனிக்கும் அதிகாரிகள் (கோவில் பண்டாரிகள்) இருந்தனர். திரு ஆமாத்தூர்க் கோவிலில் ஆட்சிக் குழுவினர் இருந்தனர். கோவிலாட்சி செம்மையாக நடைபெறுகிறதா என்பதைப் பார்க்கவும் குறைகளை நீக்கவும் அறிவுரை கூறவும் அரசாங்க உயர் அலுவலர் இருந்தனர். இந்த முன்னுரையை நினைவிற் கொண்டு கீழ் வருவனவற்றைக் காண்க.

முதலாம் இராசராசன் காலத்தில் தாமுளான் கொற்றன் அங்கி என்னும் உயர் அலுவலன் கோவில் ஆட்சி பற்றி ஆராய்ந்தான்; ஸ்ரீ பலி (அன்னம் படைத்தல்) சடங்கிற்காக நாளும் மூன்று வேளை சந்திர சேகரப் பெருமானை வாத்தியம் கொட்டுவோர் ஊர்வலமாக எடுத்துச் செல்ல வேண்டும்; அதற்காக ஓரளவு நெல்லைப் பெறவேண்டும் என்று ஏற்பாடு செய்தான்; கிராமத்தாரிடமிருந்து கோவிலுக்கு வரவேண்டிய நெல்லை அமைக்கும் பணியாளர் தங்களுக்குரிய நெல் முழுமையையும் எடுத்துக் கொள்ளாமல் குறிப்பிட்ட ஒரு பகுதியை வாத்தியம் கொட்டுவார்க்கு அளிக்க வேண்டும் என்றும் ஏற்பாடு செய்தான்; திரு ஆமாத்தூர்க் கோவிலில் அதிகாரியாகவும் இராசராச சோழனது முதலி (ஏஜெண்ட்) யாகவும் இருந்தான். அவன் கிராமத்தாரையும் கிராம சபையாரையும் ஒருங்கே அழைத்துக் கோவில் நடைமுறையை விசாரித்தான். கோவில் நெல் இராசகேசரி மரக்காலால் அளப்பதை விட்டு வீதிவிடங்கன் மரக்காலால் அளந்ததனுல் சிறிதளவு மிகுதியிருந்தது; அதனை நாளும் அக்கார அடிசில் (சர்க்கரைப் பொங்கல்) படையலுக்குப் பயன்படுத்தும்படி ஏற்பாடு செய்தான்.

அதே அதிகாரி கோவில் செய்திகளை விசாரித்துச் சில படையல் பொருள்களை 21 கோவில் பணியாளர்க்கும் பங்கிடும்படி ஏற்பாடு செய்தான். இராசராசனது 27-ஆம் ஆட்சி ஆண்டில் அரசனது பெருந்தரம் அதிகாரியான 'புதுக்குடி வேளான் ஆரூரான்' என்பவன் இந்த ஏற்பாட்டைச் சாத்திரங்களுக்கு மாருனவை என்று தடை செய்தான்.

முதற் குலோத்துங்க சோழன் காலத்தில் நந்தன் அரசன் இராசநாராயணன் என்ற இராசராச மூவேந்தரையன் கோவில் நகைகளைப் பார்வையிட்டான்; இராசராச சதுர்வேதி மங்கலம், ஜனநாத சதுர்வேதி மங்கலம் ஆகிய இரண்டு கிராமங்களின் சபையார் முன்னிலையிலும் கோவில் அதிகாரிகள் முன்னிலையிலும் அந்த நகைகளை உருக்கிப் புதிய நகைகளைச் செய்வித்தான்.

இன்று பம்பையாறு என்று சொல்லப்படுவது சோழர் காலத்தில் முஞ்சியாறு எனப் பெயர் பெற்று இருந்தது என்பது கல்வெட்டுக்களால் தெரிகிறது. முஞ்சியாற்று வட கரையிலுள்ள வயமணி நல்லூரின் கோவில் நிலங்கள் சில குத்தகைக்கு விடப்பட்டன, அவற்றின் வருவாய் கொண்டு, விளக்குகள், விழாக்கள், விஷு சங்கராந்தி என்பன கொண்டாடப்பட்டன.

கோவில் நிலங்களில் பலவகை மரங்களைப் பயிரிட்டவர் கோவிலுக்குரிய வரிகளைச் செலுத்தினர்.

கி. பி. 1383-இல் விட்டலர் ஒபுல நாதரும் பிறரும் சோளிங்க நல்லூர் என்ற இராஜ நாராயண நல்லூரில் அம்மனுக்குரிய நிலங்களைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டு, கோவில் பண்டாரத்துக்கு ஆண்டுதோறும் நிலவாடகை கொடுப்பதாக ஒப்புக்கொண்டனர்.

திரு ஆமாத்தூர் நீண்ட காலம் குடிகள் இல்லாமல் இருந்தது. கோவில் மண்டபங்களும் கோபுரங்களும் அழிக்கப்பட்டன. ஏரி உடைபட்டுக் கிடந்தது. அரசர் நரசிங்க உடையார் கி. பி. 1471-இல் சில வரிகளைத் தந்து அவற்றைக்கொண்டு கோவிலையும் ஏரியையும் பழுது பார்க்கக் கட்டளையிட்டார்; கோவிலில் தமது பெயரால் சிறப்புப் பூசையும் ஏற்பாடு செய்தார். இக்கட்டளையை அவசரம் அண்ணமரசர் என்பவர் கோவில் அதிகாரிகளிடம் ஒப்படைத்தார்.

கிருஷ்ண தேவராயர் காலத்தில் (கி. பி. 1513-இல்) கோவில் பண்டார அதிகாரிகள் காரணிகம் மங்களசையர், சாளுவ அரியவ நாயகர் என்னும் இருவர் மூலமாக அரசனுக்கு விண்ணப்பம் விடுத்தனர். சிற்ருமூர் தேவ தான கிராமம். அது முன்னதாகவே இருநூறு கலம் நெல் குத்தகைக்கு விடப்பட்டது. அது மீண்டும் கோவிலுக்கே உரிமையாக்கப்பட வேண்டுமென்றும், இரண்டு மனைகளும் 8 மாநிலமும் வரியிலியாகக் கோவில் பண்டாரி கள் இருவருக்கும் கொடுக்க வேண்டுமென்றும் விண்ணப்பம் செய்தனர்.

இராச நாராயண சம்புவராயர் காலத்தில் பழைய தேவதான நிலங்களின் வரியை மிகுதி யாகக் குறைக்கவும், சில கிராமங்களைத் தேவ தானமாக வாங்கவும் பேருதவி செய்த திரு. அம்பலப் பெருமாள் என்பவருக்குக் கோவிலதிகாரிகள் இரு மாநிலமும் கோவில் உரிமைகள் சிலவும் அளித்தனர்.

கி. பி. 1584-இல் சிரங்கதேவ மகாராயர் காலத்தில் திரு ஆமாத்தூர்க் கோவிலதிகாரி களுக்கும் பண்டாரத்தாருக்கும் பெரும்பாக்கம் கிராமத்தின் சிவ-விஷ்ணு கோவில் ஆட்சியா ளருக்கும், ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. முன் னவர் வேடம்பட்டுக் கிராமத்தில் முந்நூறு குழி நிலத்தைப் பின்னவருக்கு வழங்கினர். அதற் காகப் பின்னவர், திரு ஆமாத்தூர் ஏரிக்குத் தண்ணீர் கொண்டு வரத்தக்க கால் ஒன்றைப் பெரும்பாக்கம் ஊர் எல்லைக்குள் வெட்டும் உரிமை பெற்றனர். அச்சுதப்ப நாயக்கர் ஐயன் முதலியாரான (ஏஜெண்ட்) பொம்மு ரெட்டியார் முன்னிலையில் இவ்வொப்பந்தம் ஏற்பட்டது.

கி. பி. 1596-இல் கொண்டம நாயக்கர் கோவிலைப் பார்த்து, பங்குனி விழாவிற்கும் கோபுரத்தைப் பழுது பார்க்கவும் 1600 பொன் வழங்கினர். அப்பொழுது கோவிலுக்கு 2000 கலம் நெல்லும் 450 பொன்னும் வருமானமா யிருந்தன.

## நிலதானம்

இராசநாராயண சம்புவராயர் காலத்தில் திருஆமாத்தூரில் இருந்த ஒரு நம்பி (குருக்கள்) திருவண்ணமலையுடைய நாயனர் என்ற பெய ரில் ஒரு சிவலிங்கத்தை வைத்தான்; அதன் பூசைக்கும் படையலுக்கும் கோவிலைப் பழுது பார்க்கவும் உண்டாகும் செலவுக்காக ஒரு வேலி நிலத்தை வரியிலியாகவும் விட்டான். இதே சம்புவராயர் காலத்தில் மூஞ்சியாற்று வடகரை தாவணிப் பாக்கத்தில் நான்கு வேலி நிலம் வரியிலி தேவதானமாகச் சம்பந்தப் பெருமாள் வழிபாட்டுக்கு விடப்பட்டது. மூஞ்சி யாற்று வடகரை கீழ்ப்புள்ளூரில் 12 மாநிலம் வரியிலியாகச் சோழகுலவல்லி நல்லூர் திருவட் டாறு உடைய நாயனர்க்குப் படையலுக்கும் கோவில் பழுது பார்க்கவும் இராசநாராயணன் சந்திக்கும் விடப்பட்டது. இதே சம்புவராயர் காலத்தில் அவர் பெயரால் ஒரு சந்தி நடத் தவும், படையலுக்கும் பூசைக்குமாகக் குளத் தூர் வரியிலி தேவதானமாக விடப்பட்டது.

மாறவர்மன் விக்கிரமபாண்டியன் இரா சாக்கள் நாயன் என்னும் விருதுப் பெயர் பெற் றவன், அவன் காலத்தில் உறத்தூர் இராசாக் கள் நாயன் நல்லூர்,திருஆமாத்தூர் கோவிலுக் குத் தேவதானமாக விடப்பட்டது. அங்கிருந்த குடிகள், அதிகாரிகள் விருப்பப்படி வெளியேற வேண்டியவர். ஆமாத்தூர்க் கோவில் அதிகாரி கள் உறத்தூர் நிலங்களைப் பயிரிடச் சீலசிந்தா மணி நல்லூர் மக்களுக்கு உரிமையளித்தனர்.

இதே பாண்டியன் காலத்தில் விக்கிரம பாண்டிய மகாபலிபாணராயர் வேண்டுதல்படி பனையூர் நாட்டுச் சோழமான் பூண்டி தலைவார் நல்லூர் என்பது, விரதம் முடித்த பாண்டிய சதுர்வேதி மங்கலம் என்று விக்கிரம பாண்டி யன் பெயரால் வழங்கப் பெற்றது. அதிலிருந்து 28 பங்குகள் (1 பங்கு 4மா நிலம் வீதம்) 24 பிராமணர்க்கும் ஒரு மருத்துவருக்கும் விடப் பட்டது. அப்பிராமணர் சாத்திரம் படித்தவர். கோவிலில் வேதம் ஓத நிலம் விடப்பட்டது. இதே பாண்டியன் கி பி. 1296-இல் கோவிலைப் பழுது பார்க்கவும் இராசாக்கள் நாயன் சந்திக் கும் உறத்தூர்க் கிராமத்தை வரியிலி தேவதான மாக வழங்கினன்.

பராக்கிரம பாண்டியன் சந்திக்கும் சில விழாக்களுக்கும் கோவிலைப் பழுது பார்க்கவும், காட்டில் வேடன்பட்டு என்னும் சிற்றூரை வரியிலி தேவதானமாகக் கோனேரின்மை கொண்டான் என்ற பராக்கிரம பாண்டியன் விட்டான்.

# ஸ்ரீ வைஷ்ணவ குருபரம்பரை

திரு. K. பட்சிராஜன், B.A.,B.L., திருநெல்வேலி.

( முன் இதழ்த் தொடர்ச்சி )

அப்பால் உடையவர் "சுத்யத்ரயத்தையும், "நித்திய திருவாராதனப் படி" யையும் அருளிச்செய்து நாராயண பரத்வத்தை அறுதியிட்டு அநாதியான அந்த வைணவ தர்சனத்தைப் பரப்பிக்கொண்டு போந்தார். இவரால் கோயில் கைங்கர்யத்தை எல்லாம் சரிவர மேற்பார்வையிட்டு வருமாறு நியமிக்கப் பெற்ற உறையூர் அரசன் அகளங்கன் (அகளங்க நாட்டாழ்வான் எனப் பெயர் பெற்றவன்) கோயில் தானத்தார்களிலே பலர் தப்புற நடக்கும்படி கண்டு அவரைக் கடிந்து திருத்த முற்பட்டார். அதுவரை திருவரங்கன் செல்வங்களைத் தம் இச்சைபோல் சுரண்டிக் கொண்டிருந்த தானத்தார்கள் இதனுல் பெரிதும் கோபமடைந்தனர். அனைவரும் ஓரிடத்தில் கூடினர். உடையவரை ஒழித்துக்கட்டி விட்டால் பின் தம்மைக் கண்டிக்க ஒருவரும் முன்வர வலியிலராவர் என்று முடிவு செய்தனர். எப்படி உடையவரை முடிப்பதுஎன்பதும் அவர்கள் சதிக் கூட்டத்தே முடிவு செய்யப்பட்டது. உடையவர் மாதூகரம் பண்ணும் வீடுகளில் ஒரு வீட்டுக்குரியவர் அவருக்கு நஞ்சு பொதிந்த சோற்றை இடவேண்டும் என்பதே அம்முடிவு. இச்செயலைச் செய்வது யார் என்று அவர்கள் தம்முள்ளே கலந்தனர். ஒரு வைணவக் கயவன் அதைத் தான் செய்து முடிப்பதாக முன்வந்தான் என்று செய்யுட் குரு பரம்பரை கூறும், ஆனுல் ராமாநுஜ திவ்யசரிதையில் "ஸ்தானத்துறைக்கெல்லாம் ப்ரதானரான உத்தம நம்பி ஸம்பந்திகளிலே ஒருவர் உடையவர் மாதூ கரத்துக் கெழுந்தருளுகிற கர்ஹஸ்த ஸ்ரீ வைஷ்ணவர் திருமாளிகையிலே நூறு ஐம்பது பொன் செலவழித்து இவர்க்கு விஷமிச்ர அன்னத்தைப் பிரயோகிக்கும்படி அமர்த்து விக்க" என்று காண்கிறது.

இங்ஙனம் எம் பெருமானுக்கு நஞ்சிட இயைந்தவன் தன் மனை சென்று மனையாளை இரகசியமாக அழைத்து மறுநாள் உடையவர் மாதூகரத்துக் கெழுந்தருளுகையில் நஞ்சு

---

சடையவர்மன் விக்கிரம பாண்டியன் காலத்தில் பாண்டி மண்டலத்துக் கப்பலூரைச் சேர்ந்த அந்த தேவன் என்ற காலிங்கன் 10 நந்தா விளக்குகள் எரிக்க அவ்வியூரில் 10 மா நிலத்தை வரியிலியாக வழங்கினுன்.

கம்பண உடையார் காலத்தில் வயலணி நல்லூரில் இருந்த சிலநிலங்கள் 130 வீரசம்பன் குளிகைக்குப் பார்ப்பனர் இருவருக்கு விற்கப்பட்டன. அவ்வூர் நிலங்கள் குடிநீங்காத தேவதானமாக முன்பே கோவிலுக்கு விடப்பட்டவை.

கிருஷ்ண தேவராயர் காலத்தில் முஞ்சியாற்றிலிருந்து ஒரு கால்வாய் வெட்ட உண்டாகும் செலவிற்காக நிலம் ஒதுக்கப்பட்டது. அச் சுத்ராயர் விழாக்கள், பூசை, தயிர்ச் சோறு, படையல் இவற்றிற்காகச் சுரைப்பட்டு என்னும் கிராமத்தைத் தேவதானமாக விட்டார். இவர் காலத்திலேயே இடையாற்றுப்பற்றுச் சிற்றுமாமூர் வரியிலி தேவதானமாக விடப்பட்டது.

கி. பி. 1683-இல் பல கிராமத்தார் சில துண்டு நிலங்களைக் கோவில் பண்டாரத்திற்கு விற்றனர். திருஆமாத்தூர் ஏரிக்கு ஆற்றில் இருந்து ஒரு கால்வாய் வெட்டுவதற்கு அப்பணம் செலவிடப்பட்டது.

முதலாம் இராசராசன் காலத்தில் குணசேகரன் என்பவன் இறைவனது திருமஞ்சனத்திற்குப் பொன் பாத்திரம் ஒன்றை வழங்கினுன். கற்கள் பதித்த இரண்டு கடகங்களை அளித்தான். கொற்றன் அங்கி என்ற அரசாங்க அலுவலன் ஒரு வெள்ளிப் பாத்திரத்தையும் ஒரு வெள்ளித் தட்டையும் கொடுத்தான். மாதவன் என்ற சிற்றரசன் ஒருவன் பொன் நெற்றிப்பட்டத்தை உதவினுன். முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில் இறைவனது திருமஞ்சனத்திற்கு "இராசேந்திர சோழன்" என்று பெயரிடப்பட்ட பொன் பாத்திரம் கொடுக்கப்பட்டது.

(தொடரும்)

கலந்த சோற்றை அவள் அவருக்கிட வேண்டும் என்று கூறி நஞ்சையும் நீட்டினன். அத்தக் குலமகள் எம்பெருமானர் திருவடிகளி லே மிகவும் ஈடுபாடுடைய வளாதலின் இந்தக் கொடியவார்த்தையைக் கேட்டுத் துடிதுடித்த வளாய் "ஐயோ! என்ன வார்த்தை சொன்னீர். உடையவருக்கா விடச்சோறு? என்னையா இடச்சொல்கிறீர்? அவர் பிறப்பெனும் கடலைக் கடத்தும் தலைவனல்லவா? என் ஆன்மா உய்ய வழி காட்டியவரல்லவா அவர். உமக்கும் இவ்விதம் புத்தி போயிற்றே. இத்தகைய தீய எண்ணங்களை மறந்தொழியும்" என்று அவ னுக்கு அறப்பொருள் உணர்த்தினள். ஆனல் அப்பாதகனே ஒரு அரக்கனகவே மாறிவிட் டான். வெறிபிடித்தவனய் அவ்வணங்கைத் தன் கை ஓயு மட்டும் அடித்து மிதித்துத் தான் கொணர்ந்த நஞ்சை அவள் கையிலே வைத்து இதனைச் சோற்ருேடு கலந்து நாளை உடையவர் கலத்தில் இடாவிடில் உன்னைக் கொன்றே விடுவேன் என்று உரப்பிப் போய் விட்டான். கொண்டவன் குணக்கேடறிந்த அக்குலக் கொடி தன் கணவன் சொன்னபடியே செய் வான் என்பதை உணர்ந்தாள். ஆனல் உடைய வருக்குத்தன் கையாலே நஞ்சிட நேர்வதை உன்னி அவள் உள்ளம் பதைத்தது. முடிவில் ஒரு வழியாக ஒரு நிச்சயம் செய்தாள்.

"என்றனன் அந்தப் பாதகன் அஞ்சி ஏந் திழையாளதைச் சோற்றில் அன்றறத் திரட்டி எதிகள் நாயனர் அணைந்த போது அழுகண்ணீர் மழைகள் நின்றுறப்பொழியச் சென்றெதிர் செறிந்து திகரிலான் திருக்கையிலிருக்கும் ஒன்றிய அமுதக் கூடையில் ஆங்கோர் மருங் கினில் ஒதுங்கவிட்டகன்ருள்." உடையவர் மறுநாள் வழக்கம் போல் மாதூ கரத்துக் கெழுந்தருளினர். அவ்வம்மையார் விஷம் கலந்த சோற்றுத் திரளையைக் கையிலேந்தி மிகுந்த முகவாட்டத்தோடு, கண்ணீர் மாலை மாலையாக வழிய வந்து, இவர் மற்றைய அகங் களில் பெற்ற ப்ரஸாதத்திரளோடு இது சேராத படி அதனைக் கூடையினுள்ளே ஒரு புறமாக ஒதுக்கமாக வைத்து, தான் கொணர்ந்த விடச் சோற்றுத்திரளையைத் தனியாக ஒரு புறத்திலே வைத்தாள். பின்னர் மிகுந்த சோகக்குறி காட்டு முகத்தளாய் உடையவர் திருமுக மண் டலத்தைக் கண்ணீர் மறைக்கும் தன் கண் களால் ஏறப்பார்த்து அவரைத் தெண்டனிட்டுச் சடகெனத்திரும்பிக் கண்களைக் கசக்கிய வளாய்த் தலைகுனிந்து கொண்டே உள்ளே போய் விட்டாள். பார்த்தார் உடையவர். இவ்வம்மையார் என்றும் போல் மலர்ந்த முகத் தோடு வாராதே அழுகையோடு வந்தாள். நம் கூடையிலுள்ள பிரசாதங்களை ஒருபுறம் ஒதுக் கினள் தான் கொணர்ந்த ப்ரஸாதத்தை அவற் ருேடு சேராதே வைத்தாள். அவள் நம்மைப் பார்த்தபார்வை அவள் ஏதோசொல்ல எண்ணி ஆனல் அச்சத்தால் அதனைச் சொல்ல மாட் டாத மனத் தடுமாற்றம் போல் காண்கிறது. அவ்வுண்மையை, விலக்கி வைக்கப்பட்ட தன் சோற்றின் மூலம் குறித்தாள் போலும். சரி! இதனைச் சோதிப்போம் என்று திருவுளத்தே எண்ணியவராய்,

"என்றெதி ராசன் மடத்தினிற் சென்ருங்கு
ஏந்திழையாளிட்ட விடத்தோடு
ஒன்றிய சோற்றுப் பிடியினை எடுத்தாங்கு
உம்பனய் விடுக நீ என்ன
நின்றதோர் நாய் முன்னிட்டனன் அதனை
நேர்பெறத் தின்று நீணிலத்தில்
அன்றுடல் தவிர்ந்து விசும் படைந்து
அந் நாய் அமரரோடுற"

உடையவர் மடத்தே சென்று, அவ்வம்மை யாரிட்ட சோற்றில் ஒரு பிடியை எடுத்து அங்கு நின்ற நாயை நோக்கி 'நீ தேவனுவாய்' என்று வரமளித்து, அப்பிடி சோற்றை அதற்கிட அது அச்சோற்றை யுண்டமறுகணமே கீழே வீழ்ந் திறந்தது. (ஆனல் பன்னீராயிரப்படிகுரு பரம்பரை, உடையவர் திருக் காவேரி தீரம் சென்று அச்சோற்றை யெல்லாம் ஆற்றிலே கரைக்க, அதிலே சிதறிய சில பருக்கைகளைக் கொத்தியுண்ட காக மொன்று தலைசுழன்று பூமி யில் வீழ்ந்திறந்ததாகக் கூறும்). உடையவரும் ஓ! ஓ! உலகினதியல்பே! என்று மனக் கவலை யோடு அன்று முதல் உணவருந்தலைத் தவிர்ந் திருந்தார். இங்ஙனம் ஒருமாதம் சென்றதாக ராமாநுஜார்ய திவ்ய சரிதை கூறும்.

(தொடரும்)



தேரழுந்தூரில் நடைபெற்ற கம்பர் விழாவில், அறநிலைய ஆணையர்
திருமிகு. M.S. சாரங்கபாணி முதலியார், B.A.,B.L.,
அவர்கள் உரை நிகழ்த்துதல்



தேரழுந்தூரில் நடைபெற்ற கம்பர் விழாவில் தமிழக முதலமைச்சர்
திருமிகு. M. பக்தவத்சலம் B.A.,B.L.,
அவர்கள் உரை நிகழ்த்துதல்



தேரழுந்தூரில் நடைபெற்ற
கம்பர் விழாவிற் கலந்து கொண்ட பெருமக்கள்



Edited and Published by the Commissioner, Hindu Religious and Charitable Endowments (Admn.) Dept. Madras-34. Printed at The United Printers, 3/27 Broadway, Madras-1.